*Ñāṉacampantam*

*Malar 11, itaḻ 1*

*December 10, 1951*

Record no. 357

## துதி வாழ்த்துப்பாக்கள்

[ தருமபுர ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் குடந்தை விஜயத்தின்போது ஸ்ரீ ஆதிகும்பேசுவரசுவாமி கோவில் ஸ்ரீ மங்களவிலாச நூல்நிலயத் திருக்கல்யாண மண்டபத்தில் குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்தினர் படித்தளித்தது. ]

13—8—51.

எம்மையாள் பொருட்டுக் கயிலையு மழுமாணிலகிய திருக்கைசார் வடிவுஞ்
செம்மைசால் பெயரு நீத்துவே றடைந்தாய் திகழ்தரு திருவுளமுவந்தே
அம்மையே யப்பா வருட்குரு மணிநின் அடிமலர் தொழுதுளந் தெளிந்தோம்
சும்மைநீர்த் தடங்கள் சூழ்பெருந் தருமைச் சுப்பிர மணியதே சிகனே

உற்றவிப் பிறவிக் கடல்கடப் பதனுக் கொள்ளிய மரக்கல மாகி
பற்றமை திரோத மருளெனப் பட்டுப் பரந்தநின் திருவடி யாய
பொற்றசெம் மணிக்கு நாயினேம் மனமும் பொற்றகடாகுநா ளுளதே
சொற்றபல்வளத்தாற்பொலிபுகழ்த் தருமைச் சுப்பிரமணியதே சிகனே!

பொறையெனுங் குலையு ளன்பெனு நிறைந்த புனல்படுமெய்யடியவர் தம்
நிறைமன மெனுநற் றடத்துற மலரு நின்னடித் தாமரை மலரிற்
சிறைபடு மடியே மறிவெனும் வண்டு சேர்ந்துவாழ்ந் தமருநா ளுளதே
துறையுணர் புலவர் புகழ்பெருந் தருமைச் சுப்பிர மணியதே சிகனே

கூடிநின் றிருமுன் பணிந்துவீழ் போதே கூடிய கருமலம் வீழும்
நாடியங் கெழுபோ தருள்விரா யெழுநீ நல்குநீற் றுடல் விளர்ப்ப
நீடிய விளர்த்த வுடம்புமற் றென்று நிலத்திது சிலரெண தென்னே!
சூடிய புகழாற் பொலிபெருந் தருமைச் சுப்பிர மணியதே சிகனே.

மன்னிய கருணைப் பெருங்கயி லாய மரபுபல் லூழியும் வாழ்க
இன்னிய முகிலின் முழங்கவெக் கா லு மிலங்குநின் சந்நிதி வாழ்க
பன்னிய நினது நாமவைந் தெழுத்தும் பல்லிடந் தொறும்புகூஉ வாழ்க
துன்னிய நின்சீர் வாழ்கவான் தருமைச் சுப்பிர மணியதே சிகனே.



உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 11] கரஞு கார்த்திகைமீ 10—12—51. [இதழ் 1

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய் கூடலால வாயிலாய்
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்.

## புத்தாண்டுச் செய்தி

திருவருள் துணையால் பத்து ஆண்டுகள் நிறைந்து பதினொராவது ஆண்டினை அடைந்திருக்கின்றேன். பத்தாவது ஆண்டில் சமயக்கட்டுரைகளோடு பல சொற்பொழிவுகளையும் தாங்கி உங்களிடையே உலாவி வந்தேன். சிறந்த இலக்கண நூலும், இலக்கியங்களும் என்னை அழகுசெய்தன.

என்னுடைய வளர்ச்சியைப்பற்றி அறிஞர்கள் பலர் பாதுகாப்பாளர்க்குப் பத்திரங்கள் வரைந்தனர். அவைகளில் பெரும்பாலோர்களின் கருத்துக்களைப் பின்பற்றியே என்னுடைய வளர்ச்சி முற்குறித்தவாறு நிகழ்ந்தது. இவ்வாண்டும் பலர் எண்ணக் கருவூலங்களை உதவியிருக்கின்றார்கள். அவைகளில் எல்லார்க்கும் ஒத்தவைகளை ஒட்டியே இதுவரையில் வெளிவராத இலக்கண இலக்கிய நூல்களையும் சில மொழிபெயர்ப்புக்களையும் உங்கள் முன்பு கொண்டுவந்து சேர்க்கலாம் என்று எண்ணுகிறேன்.

## துதி வாழ்த்துப்பாக்கள்

[ தருமபுர ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் குடந்தை விஜயத்தின்போது ஸ்ரீ ஆதிகும்பேசுவரசுவாமி கோவில் ஸ்ரீ மங்களவிலாச நூல்நிலையத் திருக்கல்யாண மண்டபத்தில் குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்தினர் படித்தளித்தது. ]

13—8—51.

எம்மையாள் பொருட்டுக் கயிலையு மழுமானிலகிய திருக்கைசார் வடிவு
செம்மைசால் பெயருநீத்துவே றடைந்தாய் திகழ்தரு திருவுளமுவந்
அம்மையே யப்பா வருட்குரு மணிநின் அடிமலர் தொழுதுளந்
தெளிந்தோ
சும்மைநீர்த் தடங்கள் சூழ்பெருந் தருமைச் சுப்பிர மணியதே சிகனே

உற்றவிப் பிறவிக் கடல்கடப் பதனுக் கொள்ளிய மாக்கல மாகி
பற்றமை திரோத மருளெனப் பட்டுப் பரந்தநின் திருவடி யாய
பொற்றசெம் மணிக்கு நாயினேம் மனமும் பொற்றகடாகுநாளுளதே
சொற்றபல்வளத்தாற்பொலிபுகழ்த் தருமைச் சுப்பிரமணியதே சிகனே

பொறையெனுங் குலையுளன்பெனு நிறைந்த புனல்படு மெய்யடியவர் தட
நிறைமன மெனுநற் றடத்துற மலரு நின்னடித் தாமரை மலரிற்
சிறைபடு மடியே மறிவெனும் வண்டு சேர்ந்துவாழ்ந் தமருநா ளுளதே
துறையுணர் புலவர் புகழ்பெருந் தருமைச் சுப்பிர மணியதே சிகனே

கூடிநின் றிருமுன் பணிந்துவீழ் போதே கூடிய கருமலம் வீழும்
நாடியங் கெழுபோ தருள்விரா யெழுநீ நல்குநீற் றுடல் விளர்ப்ப
நீடிய விளர்த்த வுடம்புமற் றென்று நிலத்திது சிலரெனு தென்னே!
சூடிய புகழாற் பொலிபெருந் தருமைச் சுப்பிர மணியதே சிகனே.

மன்னிய கருணைப் பெருங்கயி லாய மாபுபல் லூழியும் வாழ்க
இன்னிய முகிலின் முழங்கவெக் காலு மிலங்குநின் சந்நிதி வாழ்க
பன்னிய நினது நாமவைந் தெழுத்தும் பல்லிடந் தொறும்புகூஉ வாழ்
துன்னிய நின்சீர் வாழ்கவான் தருமைச் சுப்பிர மணியதே சிகனே.



உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 11] கரஞு கார்த்திகைமீ 10—12—51. [இதழ் 1

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய் கூடலால வாயிலாய்
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்.

## புத்தாண்டுச் செய்தி

திருவருள் துணையால் பத்து ஆண்டுகள் நிறைந்து பதினொராவது ஆண்டினை அடைந்திருக்கின்றேன். பத்தாவது ஆண்டில் சமயக்கட்டுரைகளோடு பல சொற்பொழிவுகளையும் தாங்கி உங்களிடையே உலாவி வந்தேன். சிறந்த இலக்கண நூலும், இலக்கியங்களும் என்னை அழகுசெய்தன.

என்னுடைய வளர்ச்சியைப்பற்றி அறிஞர்கள் பலர் பாதுகாப்பாளர்க்குப் பத்திரங்கள் வரைந்தனர். அவைகளில் பெரும்பாலோர்களின் கருத்துக்களைப் பின்பற்றியே என்னுடைய வளர்ச்சி முற்குறித்தவாறு நிகழ்ந்தது. இவ்யாண்டும் பலர் எண்ணக் கருவூலங்களை உதவியிருக்கின்றார்கள். அவைகளில் எல்லார்க்கும் ஒத்தவைகளை ஒட்டியே இதுவரையில் வெளிவராத இலக்கண இலக்கிய நூல்களையும் சில மொழிபெயர்ப்புக்களையும் உங்கள் முன்பு கொண்டுவந்து சேர்க்கலாம் என்று எண்ணுகிறேன்.

சில அன்பர்கள் இலக்கண வெளியீடு எல்லோர்க்கும் பயன்படுவதில்லை ஆதலால் ஒன்றிரண்டு தொடர்கதை களும், சிறுகதைகளும் வந்தால் எளிதில் படித்து உணர வாய்ப்பாகும் என்று எழுதினர்கள். தமிழுக்கும் சைவத் திற்கும் செய்யவேண்டிய முதற்பணி, கரையானுக்கு இரையாகாதபடி நூற்செல்வங்களை நுணுகித்தேடி எல்லார் கையிலும் இருக்கச்செய்வதே. அந்தப் பணியை அணிந்து வருவதையே அனைவரும் விரும்புகின்றனர். நானும் அவ்வாறுதான் உங்களிடையே அழகுடன் இந்த ஆண்டு உலா வருவேன்.

ஒரு பெரியார் நம் சமயாசாரியர்களது வரலாற்று நிகழ்ச்சிகளை அறிவிக்கும் படங்களுடன் வரலாறுகளும் எளிய இனிய நடையில் எழுதப்பெற்றால் சமய வளர்ச் சிக்கு நல்லதாகும் என்று எண்ணம் தந்தார். மேலும் சிவஞானபோதம் முதலிய ஞானசாஸ்திரங்களுக்குப் புறச்சமயத்தாருடைய திறமில்லுரையைக் கண்டிக்கும் முறையான மறுப்புரையும் தேவை என்றார். மற்றொருவர் ஹரிஹர தாரதம்மியத்திற்கு ஓர் நல்ல உரைவெளிவரின் நலம் பயக்கும் என்றார். இன்னொருவர் ஞானபூதித் திருவிருத்தத்திற்கு ஒரு நல்ல உரை வெளிவரவேண்டும் என்று அறிவித்திருந்தார். இவ்வெண்ணங்களை நான் கூடிய விரைவில் ஏற்று உலாவர நடைமுறைகள் நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. பாலர்களும் பயின்று பயனடையுமாறு சிறுகதைகளையும் அவ்வப்போது கொண்டுவருவேன்.

இந்த ஆண்டு என்னுடைய முழுவளர்ச்சிக்குரிய ஆண்டு. அறிஞர்கள்பலர் என்னை அணிசெய்யக் காத் திருக்கிறார்கள். என்னைக்கையேற்றுக் கருதது இருத்தி பாராட்ட அன்பர்களாகிய நீங்களும் வழிபார்த்து வரவேற்கிறீர்கள். நம் அனைவரையும் எல்லாவகை யிலும் ஈடேற்றச் செந்தமிழ்ச்சொக்கர் திருவருள் காத்திருக்கிறது.

வாழிய செந்தமிழ்! வாழிய சைவம்!!

திருச்சி மலைக்கோட்டை நூற்றுக்கால் மண்டபத்தில்
நிகழ்ந்த பாராட்டுக் கூட்டத்தில்

## ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஆசியுரை

**16—11—51.**

அன்பர்களே!

அன்பர்கள் பலர் இப்பொழுது நம்மைப் பாராட்டிப் பேசினர்கள். அரியகாரியங்கள் பல செய்துவிட்டார்கள் எனப் புகழ்ந்துபேசினர்கள். அதன்படி ஒன்றும் செய்துவிட்டதாக என்மனம் எண்ண இடந்தரவில்லை. யான் செய்யவேண்டிய பணிகள் எவ்வளவோ இருக் கின்றன. செய்யப்பெற்ற பணிகள் மிகச்சொற்பமே. மடத்தின் வருவாய்க்கு ஏற்பவே அப்பணிகளும் ஆற்றப் பட்டுவருகின்றன. எல்லாவற்றிற்கும் இறைவன் அருள் இன்றியமையாது வேண்டப்படுவது. அந்த அருளைப் பெறுதற்குரிய வழிகளை அறிந்து அதன்படி நின்று அதனைப்பெற முயற்சிப்பதே நமது கடமை.

உலகத்திலே காணப்படும் பிறவிகள் எண்ணில. அப்பிறவிகள் வினைப்போகங்கள் காரணமாக அமைவன 'தொல்லை நம் பிறவி எண்ணில் தொடுகடல் மணலும் ஆற்றா எல்லைய' என்றார் சிந்தாமணியிலும். பிறவிகளில் சிறந்தது மானுடப்பிறவி. ஏன்? மனம் வாக்குக்காயம் என்ற திரிகரணங்களோடும் இறைவழிபாடு செய்யும் பெருமை அதற்கே உரியதன்றோ. ஆகவே அப்பிறவி எடுப்பது ஓர் வாய்ப்பு. ஆதலால்தான் 'கடலைக் கையால் நீந்தினன் காரியம்காண்' என்று குறிப்பிட்டுள்ளார்கள். "வாய்த்தது நம்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்" என்று அறிவிக்கின்றார்கள் நம்அப்பரடிகள். அத் தகைய வாய்த்தற்கரிய பிறவி வாய்த்ததன்பயன் இறை பணியாற்றல். இறைபணி எவ்வாறு ஆற்றவேண்டும் என்பதை அப்பரடிகளே 'தலையே! நீ வணங்காய்; கண்காள்! காண்மின்கள்; வாயே! வாழ்த்து; நெஞ்சே!

னினை; ஆக்கையே! வலம் வா' என்று ஒவ்வொரு அங்கத்திற்கும் அவ்வவற்றிற்கு ஏற்ற ஒவ்வொரு பணியை விதித்துக் காட்டுகின்றார் திருஅங்கமாலைத் திருப்பதிகத்தில். ஆகவே மனிதப்பிறவியின் பயன் இறைவனுக்கு ஆட்பட்டுத் தொண்டு செய்தல் என்பது நன்கு விளங்குகின்றது. இக்கருத்தையேதான் அவர்கள் அருளிய 'காணப்பெற்றால் மனிதப்பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே' என்ற கோயில் திருவிருத்தப்பகுதியும் தெரிவிக்கின்றது. எடுத்த பொற்பாதம் காணப்பெறுராயின் மனிதப்பிறவியே வேண்டாம் என்பதுதானே அதன் கருத்து. இறைவனுக்குத் தொண்டு எவ்வாறு செய்வது? செய்தால் அவர் எப்படி அருள்பாலிப்பார்? என்பதை உபதேசிக்கும் மற்றொரு திருப்பாடலையும் சிந்திக்கவேண்டும். அது என்ன கூறுகிறது?

விடியற்காலையில் எழுந்துவிடவேண்டும். நீராடித் தூய்மைபெறவேண்டும். 'புறந்தூய்மை நீரான் அமையும்' என்பது நம் தமிழ்ப்புலவர் திருவள்ளுவர் சொல்லியது தானே. நீராடியபின் மலர்வனம்சென்று மலர் பறித்து வந்து இறைவனை வழிபடவேண்டும். பூசிக்கும்போது ஒன்று அவசியம் கவனிக்கவேண்டும். 'கையொன்று செய்யக் கருத்தொன்று நாட விழியொன்று நோக்க' என்று கூறியபடி இருத்தல்கூடாது. 'ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள' என்று கூறியபடி திரிகரணங்களும் ஒன்றுபடவேண்டும். அப்பொழுதுதான் அன்புமிகப் பெருகும். ஆர்வத்தை உள்ளேவைக்கமுடியும். இவ்வாறு வழிபாடு முடிந்தபிறகு விளக்குப்பணி, தூபப்பணி இவைகளையும் செய்யலாம். எது செய்தாலும் அவ்வவற்றிற்கும் விதி உண்டு; விதிப்படியே செய்யவேண்டும்; விதியினின்று வழுவுதல் கூடாது என்பதுமட்டும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். இவ்வாறு வழிபாடு செய்கின்றவர்களுக்குக் கரும்பினிற்கட்டிபோல் இறைவன் இனியராவர் என்கின்றார். அப்பாடலைப் பார்ப்போம்.



பெரும்புலர் காலைமூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தை உள்ளேவைத்து
விரும்பிநல் விளக்குத்தூபம் விதியினால் இடவல்லார்க்குக்
கரும்பினிற் கட்டிபோல்வார் கடவூர் வீரட்டனாரே.

இதில் கரும்பினிற் கட்டிபோல்வார் என்று சொல்லிய இவர்கள் திருவிடைமருதூர்த் திருப்பதிகத்தில் 'கனியினும் கட்டிபட்ட கரும்பினும்.........இனியன்' என்று கருப்பங்கட்டியைக் காட்டிலும் இறைவன் மிக இனியன் என்று கூறியிருப்பதும் கருத்திற்கொள்ளத் தகுந்தது.' இனி இதற்குமேல் செல்வோம்.

இறைவனைக் கரும்பாக, கட்டியாக, தேனாக, பாலாக இன்னமுதாகக் கண்டு அநுபவிக்கின்ற பெரியோர்கள் எந்தஎந்தப் பொருளைப்பார்த்தாலும் அவ்வவற்றினிடத்தும் சிவச் செயலைக் காண்பார்கள். சிவனருளைக் காண்பார்கள். ஆதலினாலேதான் 'எத்தவத்தைச் செய்தாலும், ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனம் இருக்கும் மோனத்தே'' என்றும் 'பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர்' என்றும் கூறியுள்ளார்கள்.

ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும் – மாதேவா !
நின்செயலே என்று நினதருளாலே உணரின்
என்செயலே காண்கிலேனே.

என்பது எங்கள் ஆதீன ஸ்தாபக பரமாசாரிய சுவாமிகளின் அருள் உபதேசம். இதனை அடியார்கள் வரலாற்றில் காண்போம். முதலில் சுந்தரரை எடுத்துக் கொள்வோம்.

சுந்தரர் திருநாவலூரில் தோன்றியவர்கள். மாதொரு பாகனார்க்கு வழிவழி யடிமை செய்யும் வேதியர் குலம். வளர்ந்ததோ நாடுவாழ் அரசர் நரசிங்க முனையரது

அரண்மனையில். இவருக்கு மணப்பருவம் வந்தது. மரபுக்கேற்ற மணப் பெண். சுந்தரர் மணக்கோலம் கொண்டார். யோகப் புரவிமேல் ஆரோகணிக்கின்றார். இங்கு ஒன்று கவனிக்கவேண்டும். தோன்றிய குலம் சிறந்த வைதிகக் குலம். வளர்ந்தது அரசமாளிகையில். அங்கு செல்வத்திற்குக் குறையேது. அருமையான பட்டாடைகள், இரத்தினாபரணங்கள் எல்லாம் இருக்கும். எல்லாவற்றையும் நன்கு அணிந்து கொள்ளட்டும். ஆனால் செல்வத்தில் திளைத்தல் காரணமாக 'செல்வம் வந்துற்ற காலைத் தெய்வமும் சிறிது பேணார்' என்றபடி தமது பழைய வைதிக ஒழுக்கத்தையும் மறந்து நிற்கும் சிலர் போல நின்றாரா நம் சுந்தரமூர்த்திகள்; இல்லையே. இதைச் சேக்கிழார் சொல்லுகிறார்.

'மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க'

என்று. அதற்காக என்ன செய்துகொண்டார். வைதிகத் திருவிற்கு ஏற்பத் திருநீறும் அணிந்து கொண்டார். அதிலும் ஒரு சிறப்பு. திருநீற்றை எடுக்கும் போதும் தரிக்கின்ற போதும் 'நாயகன்சேவடி தைவரும் சிந்தையும்' என்றபடி சிவ சிந்தனையோடு இருத்தல் வேண்டும். இதையெல்லாம் நமது சேக்கிழார் பெருமான் இந்த இடத்தில் சுந்தரர் வாயிலாக உணர்த்திக் காட்டுகிறார். எப்படி?

'நாதன் தன்னடி மனத்துட்கொண்டு தகுந்திரு நீறுசாத்திப்
பொன்னணி மணியார்யோகப் புரவிமேல் கொண்டு போந்தார்.'

சம்பந்தப்பெருமானின் திருமணக்கோலத்தைக் காட்ட வந்தபோது கூட சேக்கிழார் "அழகினுக் கணியாம் வெண்ணீறு அஞ்செழுத்தோதிச் சாத்தி" என்று எல்லா அலங்காரத்திற்கும் மேலாக இதனைக்குறிப்பதை நாம் இதனோடு ஒப்புநோக்கிச் சிந்திக்கவேண்டும்.

இச் செய்யுள் தெய்வமணக்கும் செய்யுளல்லவா? இனித் தொடர்ந்து காண்போம், மணமக்கள் தத்தம்



ஆசனத்தமர்ந்திருந்தனர்.மணத்தொழில்தொடங்கிற்று. இம்மணத்தைப் பற்றிச் சேக்கிழாரே "ஒருமணத் திறத்தின் அங்கு நிகழ்ந்தது மொழிவேன் உய்ந்தேன்" என்று கூறிக்கொண்டு சொல்ல் ஆரம்பிக்கின்றார். இறைவன் அந்தணர் வேடங்கொண்டு அங்கு வந்து மணத்தைச் சிதைவு செய்து வல்வழக்கிட்டு ஆட்கொள்ளுகின்றார். பின் சுந்தரர் திருத்துறையூர், திருவதிகை, திருத்தில்லை முதலிய இடங்களை வணங்கிக் கொண்டு திருவாரூருக்கு வந்தார். புற்றிடங்கொண்ட பெருமானை நாடோறும் வழிபாடாற்றுகின்றார்.

வழிபாட்டில் ஒரு நாள். சுந்தரர் பரவையாரைக் காண்கின்றார். "நற்பெரும் பான்மை கூட்ட நகை பொதிந்திலங்கு செவ்வாய் விற்புரை நுதலின் வேற்கண் விளங்கிழையவரைக் கண்டார்" என்று காரணம் கூறுகின்றது பெரியபுராணம். காணுவதில் என்ன வியப்பு என்று நீங்கள் கேட்கலாம். ஆடவர் பெண்டிரைக் காண்பதும் அழகில் ஈடுபடுவதும் உலக இயல்புதான். ஆனால் 'முத்தர்மனம் இருக்கும் மோனத்தே' என்ற நோக்குடன் இக்காட்சியைக் காணவேண்டும். சுந்தரர் கண்டார் பரவையாரை. என்ன எண்ணுகின்றார் பாருங்கள். ஒவ்வொன்றாகச் சிந்தியுங்கள். கற்பகத்தின் பூங்கொம்போ? என்பது முதல் ஐயம். அடுத்து காமன்தன் பெருவாழ்வோ? என்றார். பிறகு விரைக் கொடியோ? என்கின்றார். ஒன்றும் தோன்றவில்லை. அற்புதமோ? என்றார். தீதகன்று உலகம் உய்யத் திருவவதாரம் செய்தவரல்லவா நம் சுந்தரர். முடிவில், 'சிவனருளோ அறியேன்' என்றார். ஆகவே சிவபெருமானின் அருள்வடிவமாகக்கூடப் பரவையார் காட்சி அளித்தார்; கண்டார் சுந்தரரும். இப்படியே, பரவையாரையும் பார்ப்போம். அவர் மனநிலை எவ்வாறு இருந்தது.

கண்டவுடன் முன்னே வந்து எதிர்தோன்றும் முருகனோ? என்று ஐயம். பிறகு மாரனோ? விஞ்சையனோ?

என்றெல்லாம் சந்தேகம் வருகிறது. நமக்கு முடிவிடம் தான் தேவை. என்ன ஐயம் பாருங்கள். 'மின்னேர் செஞ்சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ? இவ்வாறு ஏன் எண்ணவேண்டும்? அடுத்தவரி அதற்குப் பதில் சொல்லுகின்றது. 'என்மனம் திரித்த' என்று. 'ஒன்றுக்கும் அசையாத - இறைபணியன்றி வேறொன் றையும் விரும்பாத என்மனம், இவர்திறத்து ஈடுபட்டு விட்டதே! ஆதலால் இவர் மெய்யருள் பெற்றுடையவ ராகத்தான் இருக்கவேண்டும்' என்பது பரவையார் கருத்து. சுந்தரர் சிவனருளோ என்றார்; பரவையார் சிவனருளைப் பெற்றவனோ என்றார். இந்த இரண்டை யும் சேக்கிழார் இயைத்துக் காட்டுகின்றார் 'நற்பெரும் பான்மை கூட்டச்' சுந்தரர் கண்டார் என்றும், 'அண்டர் பிரான் திருவருளால் அயல் அறியா மனம் விரும்பப் பண்டை விதி கடைக்கூட்டப் பரவையாரும் கண்டார்' என்றும். ஆகவே கண்டு கலந்த இருவர்கள். அவ்விருவர் கண்ட காட்சியை நமக்குக் காட்டிய தெய்வப்புலவர் சேக்கிழார் ஆகிய இவர்கள் மூவர்களும் சிவனடியில் ஈடுபட்ட சிவசிந்தனையாளர்களாகவே விளங்கினார்கள்; எதைக்கண்டாலும் சிவனை-சிவனருளாகக்கண்டார்கள் என்றெல்லாம் நாம் தெரிந்துகொள்கின்றோமல்லவா?

இனி, திருக்கோவையாரைப் பார்ப்போம். அது மணிவாசகர் சொல்ல இறைவனே தமது திருக்கரத்தால் எழுதியதல்லவா! அதில் ஒருதுறை. கண்ணயந்துரைத் தல். அதாவது கண்ணைப் புகழ்ந்து கூறல் என்பது. எப்படிப் புகழ்வது? அதில் வெண்மையிருக்கும். கருமையும் செம்மையும் காணப்படும். அகலமாயிருக்கும். நீளமாயிருக்கும். இதைத்தானே புகழவேண்டும். புகழ்ச் சியில் கவிகள் உவமையைப் பயன்படுத்துவர். அதில் தான் அவரவர்களின் மனோநிலை காணப்படும். மணி வாசகர் கண்ணுக்கு, என்ன என்ன உவமை கொடுக் கின்றார் பாருங்கள். கண் அகலமாயிருக்கின்றது; கருத்திருக்கின்றது; வெளுத்திருக்கின்றது; நீண்டிருக்



கிறது. இந்நான்கையுந்தான் சிறப்பிக்கின்றார் அவர். முதலில் அகற்சி; தாம் பெருமானிடத்திலே வைத்த அன்புபோல இருக்கின்றதாம். அதிலுள்ள கருமை ஆன்மாவிடத்து அநாதியே பந்திக்கப்பட்டுப் பின் பெரு மானால் நீக்கியருளப்பெற்ற பாசம்போல இருக்கின்ற தாம். அடுத்தது வெண்மை; அதற்கு உவமை பெருமான் தோளில் பூசப்பெற்ற திருநீறு. மூன்றாவது நீளம். அது எது போன்றது? இறைவன் திருவடியைப்பற்றிப் பேச ஆரம்பித்தால் அதற்கு எல்லை ஏது? திருவடி எல்லைக்குட்பட்டதா? ஆகவே அப்புகழுரையைப்போல நீண்டிருக்கின்றதாம் தலைவியின் கண். இனி அப் பாடலைப் பார்ப்போம்.

ஈசற்குயான் வைத்த அன்பின் அகன்றவன் வாங்கியஎன்
பாசத்திற்காரென் றவன்தில்லை யின்ஒளி போன்றவன்தோள்
பூசத் திருநீ றெனவெளுத் தாங்கவன் பூங்கழல் யாம்
பேசத் திருவார்த்தை யிற்பெரு நீளம் பெருங்கண்களே.

திருஞானசம்பந்தப் பெருமானை எடுத்துக்கொள் வோம். தவம்பெருக்கும் சண்பையிலே தாவில் சரா சரங்களெல்லாம் சிவம்பெருக்கும் பிள்ளையாரல்லவா அவர். கச்சி, திருப்பாசூர், காளத்தி ஆகியவைகளை யெல்லாம் வணங்கிக்கொண்டு திருஒற்றியூர் நோக்கி வருகின்றார். திருமயிலாப்பூரில் வசித்தவர் சிவநேசச் செட்டியார். அவர் திருஞானசம்பந்தரிடத்தில் மிகுந்த அன்புகொண்டவர். தனது மகள் பூம்பாவையையும் அவருக்கே திருமணஞ்செய்துகொடுப்பதாகவும் எண்ணி விட்டார். பலர் அறிய வாய்விட்டும் சொல்லிவிட்டார். ஞானசம்பந்தப்பெருந்தகையாரின் திருவருள் விளக் கத்தை இன்னும் வெளிக்காட்டவேண்டும் என்ற காரணத்தாலோ, செட்டியார் அன்பின் திறத்தை அனைவரும் அறியவேண்டும் என்ற காரணத்தாலோ யாதேனும் ஒன்று. பூப்பறிக்கச்சென்ற பூம்பாவையைப் பாம்பு தீண்டிவிட்டது. பூம்பாவை உயிர்துறந்தாள். செட்டியாரும் நாம் துன்புற்று என்ன பயன்

என்றெண்ணிச் சாம்பலையும் எலும்புகளையும் ஒரு குடத்திலே எடுத்து வைத்துவிட்டார். அதற்கு நாடோறும் வழிபாடும் நடந்தது. இப்படி இருக்கப் பிள்ளையாரும் மயிலைக்கு வந்துவிட்டார். குடம் சிவிகையில் ஏற்றிக்கொண்டுவரப்பெற்றது; பெருமானின் திருமுன்பு வைக்கப்பெற்றது. பிள்ளையார் பாசுரம் பாடுகின்றார். பூம்பாவாய்! உருத்திர பல்கணத்தார்க்கு அட்டிட்டல் காணாதே போதியோ! விளக்கீடு காணாதே போதியோ! தைப்பூசம் காணாதே போதியோ! பெருஞ் சாந்தி காணாதே போதியோ! நீ உலகர்முன் வருகென உரைத்தார். குடம் உடைந்தது. இலக்குமிபோன்று பூம்பாவை எழுந்தாள். இவள் அழகைப் பலபாடல்களால் பாடிய சேக்கிழார் முடிவில் 'அழகினுக் கணியாய் நின்றாள்' என்று முடிக்கின்றார். யாரும் கன்னிதன் வனப்புத்தன்னைக் கண்களால் முடியக் காணாராயினர். ஆனாலும் முடியக்கண்டவர் சம்பந்தர்.

இதுபோன்ற அழகிய பல பெண்கள் உருவங்களைப் படைக்கின்றானே பிரமனும்; அவனும் தன்னால் தோற்றுவிக்கப்பட்ட உருவத்தின் அழகினைப் பார்த்திருப்பானே. அவன் அவ்வுருவத்தை எப்படிப் பார்த்தான். குடத்தில் தோன்றிய - தோற்றுவித்த பிள்ளையார் இவ்வுருவத்தை எப்படிப்பார்க்கின்றார். இவ்வுருவமோ பிள்ளையாருக்கு என வளர்க்கப்பெற்றது. சிறந்த அழகு; கண்டவர்கள் மனநிலை எவ்வாறிருந்தது? காட்சியை எவ்வாறுகண்டார்கள்? என்பதுதான் நாம் இங்கு சிந்திக்கவேண்டியது. நமக்குத் துணை சேக்கிழார்தான்; பிள்ளையாருக்கு முகம் ஒன்று; கண் இரண்டு. பிரமனுக்கு முகம் நான்கு; கண்கள் எட்டு. பிள்ளையார் பதினாறு ஆண்டுக் காளைப் பருவத்தர். பிரமன் பல்லாண்டு கழிந்த கிழவன். காளை எவ்வாறு பார்ப்பான்? கிழவன் எவ்வாறு பார்ப்பான்? என்பதை இங்கு யாவரும் அறிவர்.

ஆனால் நீங்கள் எண்ணுவதுபோல அவர்கள் பார்க்கவில்லை. நேர்மாறுபட்ட திருவுள்ளம். சிந்தித்துப் பாருங்கள். கிழவன் அழகினைக்கண்டு அதில் மயங்கினான். பிள்ளையார் அப்படி இல்லை. தன் ஒருமுகம் போதவில்லையாம் அவருக்கு. ஏன்? பிரமன் கண்டது எழிலின் வெள்ளம்; பிள்ளையார் கண்டது கருணை வெள்ளம். ஆகவே ஆயிரமுகத்தால் கண்டாராம்; என்ன வியப்புப் பாருங்கள். சேக்கிழார் வெகுநயமாக 'புண்ணியப் பதினாறாண்டு' என்று வயதிற்கு அடைமொழி கொடுத்துப் பேசுகின்றார். அந்த அழகிய பாடலைப் பாருங்கள்.



"எண்ணிலாண் டெய்தும் வேதாப்
படைத்தவள் எழிலின் வெள்ளம்
நண்ணு நான்முகத்தால் கண்டான்
அவளினும் நல்லாள் தன்பால்
புண்ணியப் பதினா றாண்டு
பேர்பெறும் புகலி வேந்தர்
கண்ணுதல் கருணை வெள்ளம்
ஆயிர முகத்தால் கண்டார்."

இவர்கள் வரலாற்றில் மற்றோரிடமும் சிந்திக்கத்தக்கது. அதாவது பிள்ளையார் பல தலங்களை வணங்கிக்கொண்டு திருஅரத்துறையை நோக்கி வருகின்றார். மாறன்பாடி வந்துவிட்டார். பாததாமரை நொந்தன. வழக்கம்போலத் தந்தையார் தோள்மீது ஏறிக்கொண்டு செல்லவிரும்பவில்லை. தரிசன விருப்பமும் அதிகமாகின்றது. என்செய்வார்? வழிவருத்தத்தால் அங்கு சற்று இளைப்பாறினர். பிள்ளையின் இளைப்பை பெருமான் அறியாமலிருப்பரோ? நெல்வாயில்மறையோர் கனவில் அருளிச் செய்கின்றார். 'ஞானசம்பந்தன் வருகின்றான்; முத்தின் சிவிகை, மணிக்குடை, சின்னம் எல்லாம் தருகிறோம்; எடுத்துச்சென்று கொடும்' என. விடிந்தது. அவர்களும் அவ்வாறே எடுத்துச்சென்று கொடுத்தார்கள். இதனைப்பிள்ளையாருக்கும் பெருமான் முன் அறிவித்திருந்தனர். ஆனாலும் பிள்ளையார் உடனே சிவிகையில்

ஏறிக்கொண்டனரா? உடல்களைத்தோர் ஊர்தி கண்ட வுடன் மகிழ்ந்து ஏறிக்கொள்வாரேயன்றிச் சிறிதேனும் தாமதிப்பரோ. பிள்ளையாரோ தாமதித்தாராம். திருப் பதிகமும் பாடத்தொடங்கினர். 'அரத்துறை அடிகள் தம் அருள் இதுவாகும்' என்கின்றார். எக் காரியத்தைச் செய்ய முற்பட்டாலும் இறையருளை எண்ணுதல், திரு வெண்ணீறணிதல், ஐந்தெழுத்தோதுதல் இவைகளை மட்டும் மறந்துவிடமாட்டார்கள். பிள்ளையார் என்ன செய்கின்றார் பாருங்கள். சிவிகையை வலம்வருகின்றார். பார்மீது தாழ்ந்து வணங்குகின்றார்; வெண்ணீற்றின் ஒளி போற்றிநிற்கின்றார்; ஐந்தெழுத்தை ஓதுகின்றார். இவ்வளவையும் முடித்துப் பின்னர் சிவிகையில் ஏறு கின்றார். ஏறுவதும் எதற்காக என்பதை 'ஏறினர் உய்ய உலகெலாம்' என்று சொல்லிக்காட்டுகிறார் கவி. சிவிகையும் எப்படிப்பட்டது. 'சோதிமுத்தின் சிவிகை' என்கிறார். அதன் கருத்து என்னே? சிவதீக்ஷைபெற்ற ஆன்மாக்கள் ஒளிபெறும் அல்லவா? ஆதலால் அந்த ஞான ஒளிகளெல்லாம் ஒன்று சேர்ந்துள்ளது சிவிகை யில் என்றுகூடச் சொல்லலாமே. சிவிகையைக் கண்ட வுடன் பிள்ளையார் மனநிலை எவ்வாறிருந்தது என்ப தைச் சிந்தியுங்கள்.

சோதிமுத்தின் சிவிகைசூழ் வந்து பார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்(று)
ஆதியார் அருளாதலின் அஞ்செழுத்(து)
ஓதி ஏறினர் உய்ய உலகெலாம்.

இயற்கையிலும் இறைவன் காட்சியைக் காண்பவர் கள் அடியவர்கள். ஒன்று கூறுகிறேன். ஒரு பெரிய நந்தவனம். அதில் ஒரு கொன்றைமரம் வளர்ந்தோங்கி இருக்கிறது. அதனடியில் மிளகுக் கொடி தோன்றியது. அது நன்றாக வளர்ந்து செழித்து மரத்தின்மீது தாவிப் படர்கிறது. மரத்தைச்சுற்றிலும் முல்லை பெருந்தூறாக முளைத்திருக்கின்றது. அது வெறும் முல்லையல்ல; அதில் பூக்கள் நிறைய இருக்கின்றன. முல்லைப்பூ வெண்மை



யானதல்லவா? ஆகவே கொன்றைமரத்தடி ஒரே வெண்மையாக இருக்கிறது. இந்த முல்லைச் செடியில் ஒரு கரடி பதுங்கிக் கொண்டிருக்கிறது. இவ்வளவுதான். ஒரு கொன்றைமரம், முல்லைப்பூ, மிளகுக் கொடி, ஒரு கரடி ஆக நான்குதான். இவைகளை யாரும் காணலாம். ஒவ் வொருவருக்கும் ஒவ்வொரு நினைவுவரும். சிலர் மலரழகில் ஈடுபடுவர். சிலர் கரடியை மட்டும் காண்பார்கள். சிலர் மிளகினைமட்டும் பார்ப்பார்கள். தாவரநூலறிஞர்களோ இவைகளில் காணுகின்ற செழுமையைப் பார்த்து மகிழ்வர். இயற்கையிலன்றிச் செயற்கையிலுங் கூட நிலத்தைப் பரிசோதித்து அதற்கு ஏற்ற எருக்களை இட்டு நினைத்தபயிர்களை யுண்டாக்குகின்ற காலமல்லவா இது. இவர்களைவிட்டுக் கவிஞர்கள் மனநிலையை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு சங்கப்புலவர் சொல்லுகின்றார் பாருங்கள். "பிள்ளை வெருகின் முள்ளெயிறு புரையப் பாசிலை முல்லை முகைக்கும் நாடு" அதாவது காட்டுப் பூனையின் பற்களைப் போல முல்லை பூக்கின்ற நாடு என்று. இப்படித்தான் ஒவ்வொரு கவிஞனும் ஒவ்வொரு பொருளுக்கும் உவமையைத் தேடிக்கொண்டிருப்பான். ஆனால் நம் மாதவச்சிவஞானசுவாமிகள் இக்காட்சியைக் கண்டார். சுவாமிகள் மனதில் என்னதோற்றம் உண்டாகிறது பாருங்கள்.

நான்கு பொருளுக்கும் நான்கு உவமை. எப்படி இந்த நான்கு பொருளும் ஒரேயிடத்தில் ஒரே காலத்தில் இருக்கின்றதோ, அதேபோல அவர்கள் உவமையாக எடுத்துக்கொண்ட நான்கு பொருளும் ஒரேயிடத்தில் ஒரே காலத்தில் இருப்பன. சிவபெருமான், அவர் பக்கத் தில் பராசக்தி, இருவரும் எழுந்தருளியிருக்கின்ற வெள்ளிமலை, மலையைத்தூக்க முற்பட்டுக் கீழே நின்று பெயர்க்கின்ற இராவணன். ஆகவே இராவணன் மலையைப் பெயர்க்கின்றான்; மலை வெண்ணிறத்தது. பெயர்க்கின்ற அசைவினால் அஞ்சிய அம்மையார் பயந்து பெருமானைத் தழுவுகின்றார். இக்காட்சியை

நினைவூட்டுகின்றது சிவஞான சுவாமிகளுக்கும். சிவம் நிறைந்த சிந்தையாளரல்லவா? நம் சுவாமிகள். இக் கயிலைக்காட்சியை இயற்கைக் காட்சியோடு ஒப்பிட்டுப் பாருங்கள். கரடி கரிய இராவணனுக்கு உவமை; பெயர்க்கின்ற வெள்ளிமலையைப்போல் தோற்றுகிறது முல்லை மலரின் வெள்ளிய தோற்றம்; அதற்குமேல் நிற்கின்ற கொன்றை மரம் இறைவனைப் போலவாம். தாவிப்படர்கின்ற கறிக்கொடி தழுவுகின்ற இறைவியை நினைப்பூட்டுகிறதாம். என்னே தூய உள்ளம். இப் பொழுது பாடலைப்பாருங்கள்.

சுற்றெல்லாம் மலர்முல்லை ததைந்துபெருந் தூறுசெய
 அதன்கீழ் எண்கு
பற்றிநுழைந் துறங்கநடு வளர்கொன்றை மிசைக்கறிதாய்ப்
 படரும் தோற்றம்
உற்றரக்கன் வெள்ளிமலை எடுத்தநாள் வெரீஇத்தழுவும்
 உமையா ளோடும்
கற்றைவார் சடைப்பெருமான் நின்றநிலை காட்டுவதும்
 உண்டால் அங்கண்.

ஆகவே இதுவரையிலும் அடியார்கள் உள்ளம் எந்நிலையிலுள்ளது? தாம்கண்ட காட்சிப்பொருளை எந் நிலையோடு பொருத்திக் காட்டுகிறார்கள் என்றெல்லாம் தோத்திர நூல்களிலிருந்து சிலவற்றைச் சிந்தித்தோம், இனி இவ்வாறு இறைபணியாளராக ஆதல் எப்படி? அதற்குத்தடை எது? அது எப்படி அகலும் என்பது பற்றி இரண்டொன்று சிந்திப்போம். ஏன் தோத்திரம் இலக்கியம்; சாத்திரம் இலக்கணம் அல்லவா?

ஒருகதை. அரசகுமாரன் ஒருவன். இளமை யிலேயே வேடர் கூட்டத்தைச் சார்ந்து விட்டான்.. அவர்கள் கூட்டத்திலே வளர்கின்றான். தான் அரச குமாரன் என்பதையும் அறவே மறந்துவிட்டான். வேடுவர்குல ஆசாரத்தையே பின்பற்றிக் கொண்டான். இந்நிலையில் இருக்கும் அரசகுமாரனை அரசன் ஒருநாள்



தேடிப்பிடித்துவிட்டான். 'நீ என்மகன்; இங்கே வந்து விடு; வேடர்கள் கூட்டுறவை விட்டுவிடு' என்று கருணை யோடு அழைத்துக் கொண்டான். மகனைத் தனதாக்கிக் கொண்டான். காப்பாற்றுகின்றான். இதுபோலத் தான் நாமும். எப்படி? அரசகுமாரன் யார்? நீங்களும் நாமும் ஆகிய உயிர்கள். வேடர்கள் யார்? நம்மோடு கூடவே இருக்கின்ற மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற பஞ்சேந்திரியங்கள். இவ்விந்திரியங்கள் வயப்பட்டு நாம் மயங்கிக் கிடக்கின்றோம். மயங்கிக் கிடக்கின்ற நம்மைத் தெளிவிக்கின்றான் அரசன். அரசன் யார்? அவர்தான் நம் இறைவன், இறைவனே நம்மிடமுள்ள கருணையால் அருட்குருவடிவாகிவந்து நம்மை வேடுவர் களின் கொடுமையினின்றும் நீக்கி மலம் அகற்றி உப தேசம் அருளுவார். கேட்டநாமும் சிவஞானச் செம்ம லாகத் திகழ்வோம். இக்கருத்தை நமக்குபதேசிப்பது,

மன்னவன்தன் மகன்வேட ரிடத்தே தங்கி
 வளர்ந்(து)அவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன் நீ என்றவரிற் பிரித்துப்
 பெருமையொடும் தானாக்கிப் பேணுமாபோல்.
துன்னியஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்
 துணைவனையும் அறியாது துயருறும் தொல்லுயிரை
மன்னும் அருட் குருவாகி வந்(து) அவரின் நீக்கி
 மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்

என்ற சிவஞானசித்தியார் திருப்பாடல். 'இதில் தொல் உயிர்' என்ற குறிப்பினைப் பாருங்கள். உயிர் நித்தியமா யுள்ளது என்பதையல்லவா இது காட்டுகின்றது.

மெய்யன்பர்களே! இவைகளையெல்லாம் ஏன் இங்குச் சொல்லுகிறேன். யாவருக்கும் ஆலயவழிபாடு அவசியம் வேண்டும். வழிபாட்டினால் பெரும்பயனுண்டு. வழி பாட்டிற்காகக் கொடுக்கப்பட்டதே இம்மானுடப்பிறவி. இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ? யாது வருமோ? என்று அஞ்சுகிறாரே ஒருபெரியார். அதுவும்

மானுடப்பிறவியின் அருமையைத்தானே காட்டுகிறது. ஆகவே இப்பிறவி கிடைத்தபோதே இறையருள் பெற வேண்டும். பெரும்வழிகள்தான் சிவத்தொண்டு அடியார் தொண்டு முதலிய எல்லாம் என்பதை நினைப்பூட்டுவதற் காகத்தான். 'சித்தாந்தத்தே சிவன்தன் திருக்கடைக் கண் சேர்த்திச் செனனம் ஒன்றிலே சீவன்முத்தராக, வைத்தாண்டு மலங்கழுவி ஞானவாரி மடுத்து ஆனந்தம் பொழிந்து' அதுமட்டுமா? 'வரும்பிறப்பை அறுத்து முத்தாந்தப் பாதமலர்க்கீழ் வைப்பன்'. மக்கள் அடைய முயற்சிப்பது செல்வமும் அதனால் பெறக்கூடிய இன்ப முந்தானே. செல்வத்தில் சிறந்தசெல்வம் எது? செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே! 'சென்றடையாத திருவுடையான்' என்று குறிப்பிடுகின்றார் இந்தத்தலப் பதிகத்தில். இன்பம் எது? இறைவன்கழல் ஏத்தும் இன்பம் இன்பமே. ஆகவே நீங்கள் யாவரும் செல்வமும் இன்பமும் அடைந்து சிறப்புற, எங்கள் குருஞான சம்பந்தர் குருவருளும் ஸ்ரீ தாயுமானேசுவரரின் இறை யருளும் துணைசெய்வதாக. கவுணியன் ஞானசம்பந்தன் நலமிகுபாடலில் வல்லராகி வானசம்பந்தத்தவரொடு மன்னி வாழ்வீர்களாக.

---





# வரவேற்பு நன் மலர்

13—8—51 திங்கட்கிழமையன்று திருக்குடந்தைமாநகருக்கு எழுந் தருளிய ஞான்று அவர்களது அருள் நலம், தெருள் நலம், அற நலம், பிற நலம் பாராட்டிப் புகழ்ந்து ஏத்தி, பொன்னார் திருவடிகளில் மன்னிச் சுடர, திருக்குடந்தை நகர மன்றத்தார் சூட்டியது.

## ஞானங்கனிந்த நல் அருட் குருவே!

உலகத்தில் உயிர்கள் ஏன் தோன்றின? அவை இங்கு இன்பமுற வாழும் வகை எது? வாழ்க்கையின் குறிக்கோள் யாது? பிறவியின் பெரும்பயன் என்ன? என்ற இத்தகைய அடிப்படையான வினாக்களுக்கு அறிவினால் விளக்கிக்கொள்ளு மாறு பல சொற்களால் விடை சொல்லிவிட முடியாது. ஆனால், அவற்றிற்கு உண்மையான விடைகளை, எல்லாம்வல்ல இறைபரம் பொருளே! பேரருட்பெருக்கால், குருபரனாகி, முதன்முதலில் ஒரு நல்லுயிர்க்கு உளங்கொள உணர்த்தினார். இந்நாள்வரையில், பெறுதற்கரிய அவ்வுணர்ச்சி ஞானமானது பரமாசாரியர்களால் வழிவழியாகப் பக்குவப்பட்ட உயிர்களுக்கு உதவப்பெற்று வருகின்றது. அவன் அருளே கண்ணாகக்கண்ட அருந்தகை யாளர்களே தேவரீரது முழுஞான மூதாதையர்கள். அந்த அருள்ஞானப் பரம்பரையில் வந்த தவப்பேறுபெற்றவர்களே தேவரீர். தேவரீரது அருள்செறிந்த அனுபவஞானப் பெரு ஞாயிறே, இந்நாளைய எழுத்திலடங்கா இன்னல் இருளையெலாம் இருந்த இடம் தெரியாமல் ஓட்டி, ஒளி விளக்கி, நன்னலம் வளர்க்கும் நறுந்தகைமையதாகும். அந்த ஞானத்தை மேலும் வலியுறுத்திக்கொள்ளுதற்குத் தேவரீர், வியாழன் தோறும் மௌனமும் பட்டினியும் பூண்ட தவ ஒழுக்கமும், அகலாத அன்பினால் இடைவிடாது அகங்கனிந்த ஆண்டவன் வழிபாடும், மற்றவும் மேற்கொண்டு நெறிபிறழாது ஒழுகிவருகின்றீர்கள்.

## அருள்நெறி புரக்கும் அந்தணாளீர்!

அருள்நெறியாம் திருநெறி தென்னாட்டில் அழகுற மலர்ந்து உலகமெலாம் மணக்கவேண்டும் என்னும் பேரவாவினால்,

தேவரீரது ஆட்சியிலுள்ள இருபத்தேழு கோயில் அறங்களையும்
பலரும் போற்றும்வகையில் பயன் மிகப்பெருகும் பாங்கோடு,
பரிபாலித்து வருகின்றீர்கள். தேவரீரது ஆளுகையில் உள்ள
கோயில் என்பதை ஒருவரும் எடுத்துச்சொல்லாமலே, சென்று
கண்டதுமே, துப்புரவான தோற்றத்திலிருந்தும், வளமான
வழிபாட்டு நடைமுறையிலிருந்தும் எவரும் எளிதில் தெரிந்து
கொள்ளக்கூடும். பல தலம் சென்று அருள்நெறி பரப்பும்
கடப்பாட்டினால், இருநூற்றறுபது ஆண்டுகளுக்கு மேலாகப்
பட்டம் அமர்ந்த பல சந்நிதானங்கள் செல்ல இயலாதிருந்த
காசியம்பதிக்கும் தேவரீர் எழுந்தருளி, ஆங்கும் வடநாட்டில்
உள்ள ரிஷிகேசம் முதலிய பிற இடங்களிலும் தெய்வ மணம்
கமழச் செய்தீர்கள். கோயில்களிலே திருத்தமான முறையில்
வழிபாடுசெய்யும் வகைகளைக் கற்று அறிந்துகொள்ள, தேவரீர்
தருமையில் ஓர் ஆகம பாடசாலை அமைத்து அழகாக நடத்தி
வருகின்றீர்கள். ஆகமங்களைச் செம்மையாக அறிந்துகொள்ளும்
ஆற்றலைப் பெறுவதற்குத் துணையாயிருக்குமாறு வடமொழியில்
பல்கலைக்கழகத்தின் சாகித்தியசிரோமணிப் பட்டத்தேர்வுக்குரிய
படிப்பும் தேவரீரது கீழ்த்திசைக் கல்லூரியில் கற்பிக்கப்பெறு
கின்றது. தமிழில் புலமையும், திருமுறைகளைப் பண்முறை
தவறாது ஓதுதலில் வல்லமையும் பெற, வித்துவான் பட்டம்
பெறுதற்கான படிப்புத் திட்டமும் அக்கல்லூரியில் அமைக்கப்
பெற்றிருக்கின்றது. தேவாரபாடசாலையும், இசைப்பகுதியும்
இணைக்கப்பெற்றிருக்கின்றன.

## அறிவு வளர்க்கும் அருமறை யண்ணல் !

சிறப்பாக அருள்நெறி வளரவேண்டும், பொதுவாக மக்க
ளிடையே நல்லறிவு வளரவேண்டும் என்னும் ஆவலினால், பல
அரிய நூல்களை அச்சிட்டு வழங்கிவருகின்றீர்கள். நூற்றுக்
கணக்கான வெளியீடுகள் தேவரீரது ஆதீனத்திலிருந்து நாடு
எங்கணும் உலவி ஒளிபெருக்கிவருகின்றன. மாதந்தோறும்
நம் நாட்டிலுள்ள பாடல்பெற்ற ஒவ்வொரு திருக்கோயிலில்
தனிச்சிறப்பு வழிபாடு நடத்தி, அத்தலத்தின் திருமுறைப்
பாடல்களை அச்சிட்டு அன்று அங்கு இலவசமாக வழங்கிவர,
ஒருதிட்டப் வகுத்து அதனை முறையாகச் செயற்படுத்தி வருகின்
றீர்கள். **ஞானசம்பந்தம்** என்னும் தேவரீரது ஆதீனத் திங்கள்



மலர், படிக்கச் சுவையுடையதாக, அறிவுப் பூஞ்சோலையாக,
அழகும் மணமும் சென்ற இடமெங்கணும் வீசிவருகின்றது.
தேவரீரது ஆட்சியிலுள்ள கோயில்கள்தோறும் நூலகங்கள்
அமைத்திருத்தலோடு, தருமையில் தேவரீரது நேர்பார்வையில்
மிகப் பெரிய நூல்நிலையம் ஒன்று நிறுவி, ஒவ்வொருநாளும்
அதனைப் பெருக்கிவருகின்றீர்கள். **ஆதீனப் புலவர்** என்ற
பட்டத்தைப் பல அறிவின் செல்வர்களுக்கு வழங்கி, அவர்கள்
வாயிலாக நாடுமுழுதும் நல்லறிவைப் பரப்பிவருகின்றீர்கள்.
தேவரீரது ஆதீனத்தின் திருக்கூட்டத் தம்பிரான் அடிகளார்
யாவரும் நல்ல புலமைபூண்டு இலங்கப் பல்கலைக்கழகத் தேர்வு
கட்கு அவர்களை அனுப்பிவருகின்றீர்கள். பலர் வித்துவான்
பட்டம் பெற்றுத் திகழ்கின்றார்கள். பொதுமக்கள் நன்னெறி
அறிவு விளங்கப்பெறுவதற்காக ஊர்கள்தோறும் சென்று
சொற்பொழிவால் அறிவுபரப்பும் பேருந்தும், அதற்கான
அறிஞர் அடியார் குழுவும், அமைத்திருக்கின்றீர்கள்.

## பல்லுயிர்க்கு இரங்கும் பரமாசாரிய!

உயரிய உண்மை அனுபவ ஞானம் கைவரப்பெற்று அதனை
உரிய உயிர்கட்கு வழங்கவல்ல பெருஞ்சிறப்புடைய தேவரீர்
எளியார்க்கு எளியராகவும், ஏழை பங்காளராகவும், விளங்கி
வருகின்றீர்கள். தேவரீரது பரந்த அருள் உள்ளம் பலவகை
உயிர்கட்கும் ஒருபடித்தாக இரங்கும்பேருள்ளம்! ஹரிஜனங்கள்
எனப்பெறும் திருக்குலத்தார்க்குத் தருமையில் தாங்கள் அன்ன
டம் அறுசுவை உண்டி அளித்துவருகின்றீர்கள். அக்குலத்துப்
பிள்ளைகள் எட்டாம்வகுப்புவரை மற்ற இனத்துப் பிள்ளைகளோடு
கலந்து சம்பளமின்றி நூல்முதலிய இலவசமாகப்பெற்றுப் படிக்க
ஏற்பாடு செய்திருக்கின்றீர்கள். சிற்றூர்களி எண்ணெய்
தேய்த்துக்குளித்தே அறியாதஏழைஎளியவர்களுக்கு எண்ணெய்,
சீயக்காய் வழங்கிவருகின்றீர்கள். உயர்நிலைப்பள்ளிகள் கல்லூரி
களில்படிக்கும் ஏழைமாணவர்கள் பலருக்குஇனவேறுபாடின்றிச்
சம்பளம், நூற்கள், நன்கொடையளித்து வருகின்றீர்கள். படிப்
பில் ஊக்கம்மிகுவதற்குப் பல பள்ளிகள் கல்லூரிகளில் பரிசுகள்
பல வழங்கிவருகின்றீர்கள். திருக்குல மக்கள் கோயில்கட்குச்
சென்று வழிபட முதன்முதலில் தேவரீரே தேவரீரது ஆளுகை

யிலுள்ள கோயில்களைத் திறந்துவிட்டீர்கள், தேவரீரது ஆட்சிக் கோயில்களிலும், ஆட்சிக்குட்பட்ட பிற நிலையங்களிலும், ஏழை மக்கட்குக் குடிநீர்வசதிக்காக அங்குள்ள கிணறுகளுக்குப்பொறி ஏற்றம் அமைத்துக் குழாய்வைத்துக் கொடுத்துவருகின்றீர்கள்.

## அறம்பல வழங்கும் அருங்கொடை வள்ளால்!

மக்களின் உயிர்நலமே அன்றி உடல் நலமும் தேவரீரது திருக்கருத்தை ஈர்த்துவர, அவை இரண்டிற்குமான பல அறங்களை ஆங்காங்குபுரிந்து, மக்களை மகிழ்வித்து வருகின்றீர்கள். தேவரீரது நன்கொடையால் எத்தனையோ பள்ளிக்கூடங்கள் கட்டிடங்கள் கட்டிக்கொண்டன. மொழிக்கெனவும், சமயத்திற்கெனவும், இடம்பெயர்ந்த எளியோர்க்கெனவும், கல்விக்கெனவும் நல வளர்ச்சிக்கெனவும், அருட்பெருக்கிற்கெனவும், தேவரீர் வழங்கிவரும் நன்கொடைகள் எண்ணிலடங்காதனவாகின்றன. வடலூர் சத்திய ஞானசபைக்கெனவும், தஞ்சைமாவட்ட காச நோய் மருத்துவச்சாலைக்கெனவும், தாங்கள் வரையாதுவழங்கிய பெருந்தொகைகள் போற்றிப்பாராட்டும் பெருமையன. மாயூரத்தில் 250ஆயிரம் ரூபாய் செலவில் மிக உயர்ந்த முறையில் ஏழை எளியவர்க்கு மகப்பேறு மருத்துவச்சாலை அமைத்துக் கொடுத்திருப்பதை என்னென்று போற்றுவது! தேவரீரது பேரறநெஞ்சத்தினையும், வள்ளல்வளமையையும் உன்னி உளம்பூரிக்கின்றோம். தேவரீரது பெருமையையும், பேரறத்திறத்தினையும், நினைந்து நினைந்து வியந்து வியந்து, மகிழ்ந்து மகிழ்ந்து ஈடு எடுப்பில்லா இன்பம் அடைகின்றோம்.

எங்கள் மனம் நிரம்பிய அன்பின் களிப்பினாலே, தேவரீர் நீடூழி, நலம் செறிந்து, நிலவி வாழ்ந்து வரவேண்டும்; அருள்நெறியும், அறிவும், அறநெறியும், பிறநலமும், செழித்து மேலும் மேலும் ஓங்கி வளர ஆவனயாவும் புரிந்து வரவேண்டும் என்று இந்நகரத்து நூறாயிரம்மக்கள் சார்பாக எல்லாம்வல்ல இறைவன் திருவருளை உளமுருக உன்னி இறைஞ்சிநிற்கின்றோம்.

இங்ஙனம்,

**நகரமன்றத்தலைவர், துணைத்தலைவர், உறுப்பினர்கள்.**

### ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்கள்

# திருச்சி விஜய நிகழ்ச்சிகள்

[வித்துவான், திரு. தி. பட்டுச்சாமி ஓதுவார், திருச்சி.]

16—11—51 வெள்ளிக்கிழமை காலை $9\frac{1}{2}$மணிக்கு, தருமை ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் சென்றடையாத திருவுடைய சிராப்பள்ளிக் குன்றுடையான் தரிசனத்தின் பொருட்டு, திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை மௌனமடத்திற்கு எழுந்தருளினார்கள். மங்கலவாத்திய விருதுகளுடன் மலைக்கோட்டை மௌனமடம் கட்டளைவிசாரணை வித்துவான் ஸ்ரீமத் இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்களும் பெருமக்களும் மெய்யன்பர்களும் புடைசூழ, பூரணகும்பந்தாங்கி எதிர்சென்று வரவேற்றார்கள்.

பின்னர், மகாசந்நிதானமவர்கள் மௌனமடம் பண்டாரக் கட்டிற்கு எழுந்தருளிக் கொலுவீற்றிருந்தருள, மிகச்சிறப்புடன் பூசை நடந்தேறியது. அதன்பிறகு, அடியவர்களுக்கும் அன்பர்களுக்கும் மகாசந்நிதானமவர்கள் விபூதிப்பிரசாதம் வழங்கி ஆசியருளினார்கள்.

பகல் 12மணிக்கு, சிராமலை உச்சிப்பிள்ளையாருக்கும், மலைக்கோயில் ஸ்ரீ தாயானசெல்வர்க்கும், ஸ்ரீ மட்டுவார்குழலம்மைக்கும், பரிவாரமூர்த்திகளுக்கும் விசேட அபிடேக ஆராதனைகள் நடந்தேறின. பிறகு மௌனமடத்தில் மாகேசுவரபூசை நடைபெற்றதும், ஏழைமக்கட்கு அன்னம் அளிக்கப்பெற்றது. இதற்கு இடையே, திருச்சி அகில இந்திய வானொலி நிலைய உதவித் தலைவர் அவர்களின் அன்புகலந்த அழைப்பிற்கு இணங்கி, மகாசந்நிதானமவர்கள் மாலை 4மணிக்கு, திருச்சி வானொலி நிலையத்திற்கு மெய்யன்பர்கள் குழாத்துடன் எழுந்தருளினார்கள். நிலைய அமைப்புக்களையெல்லாம் நன்கு பார்வையிட்டருளினார்கள். வானொலி நிலையத்தின் பார்வையாளர் குறிப்புப் புத்தகத்தில் மகாசந்நிதானமவர்கள் தம் உள்ளமகிழ்வைக் குறித்துத் திருக்கண் சாத்தியருளி மௌனமடத்திற்கு எழுந்தருளினார்கள்.

மாலை. மகாசந்நிதானமவர்கள் அனுட்டானத்தை முடித்துக்
கொண்டு, சிராப்பள்ளிக் குன்றுடையான் தரிசனத்திற்கு எழுந்
தருளும்போது, மெய்யன்பர்களின் வேண்டுகோளின்மீது
தம்பிரான் சுவாமிகள் பிரமுகர்கள் அன்பர்கள் முதலியவர்
களுடன் புகைப்படம் எடுத்தற்கு அனுமதிவழங்கியருள, புகைப்
படமும் எடுக்கப்பெற்றது.

உடனே விருதுகள் முன்னணியில் நிற்க, மேளவாத்தியம்
முழங்க, மலைக்கோயில் தேவஸ்தானம் மானேஜிங்டிரஸ்டி திரு.
T. M. கலியபெருமாள்பிள்ளை அவர்கள் நகரப்பெருமக்களுடன்
எதிர்கொண்டு ஆலய தரிசனத்திற்கு அழைக்க, மகாசந்நிதானம்
அவர்கள், வித்துவான் ஸ்ரீமத் இராமலிங்கத்தம்பிரான்சுவாமிகள்,
'ஞானசம்பந்தம்' ஆசிரியர், திருநள்ளாறு கட்டளைவிசாரணை
ஸ்ரீமத் நாகலிங்கத் தம்பிரான் சுவாமிகள், திருச்சிராப்பள்ளி
சப்ஜட்ஜ் கனம் V. இரத்தின முதலியார், நகரசபையின்
ஆணையாளர் திரு. K. இராமலிங்க முதலியார், மௌனமடம்
மானேஜர் திரு. சிதம்பரம்பிள்ளை இன்னும் பல பிரமுகர்கள்
உத்தியோகஸ்தர்கள் அன்பர்குழாங்கள் ஆகியோர் புடைசூழ
எழுந்தருளி, முன்னர் உச்சிமலையில் திருக்கோயில்கொண்டு
எழுந்தருளிய மூத்தபிள்ளையாருக்குப் பட்டாடைசாத்தி விசேட
அர்ச்சனை செய்வித்துத் தரிசனம் செய்தருளினார்கள். பிறகு,
ஸ்ரீதாயானசெல்வர் சந்நிதிக்கு எழுந்தருளி, பஞ்சமுகசகஸ்ரநாம
அர்ச்சனைகள் முறைப்படி செய்விக்கப்பெற்றன. பெண்ணாகிய
பெருமானுக்குப் பெரும்பட்டாடைசாத்தப்பெற்று, திருச்சிராப்
பள்ளித் தேவாரம் முழுமையும் முறையாக ஓதுவாமூர்த்திகளால்
ஓதப்பெற்றது. தீபாராதனை முடிவுபெற்றதும் மகாசந்நிதானம்
அவர்கள் அண்மையில் குழுமியிருந்த அன்பர்களுக்கு விபூதிப்
பிரசாதம் வழங்கினார்கள்.

அதன்பிறகு, மகாசந்நிதானமவர்கள் நடராசர், சோமாஸ்
கந்தர், சந்திரசேகரர், தட்சிணாமூர்த்தி, முருகப்பெருமான்,
சண்டேசுவரர் ஆதியோர் சந்நிதிகளுக்குச் சிவநாம முழக்கத்
துடன் எழுந்தருளிப் பட்டாடைசாத்தி, விசேட அருச்சனை
செய்வித்து, அவ்வவ்மூர்த்திகளுக்கு உரிய தேவாரம் ஓதப்
பெற்றுத் தீபாராதனைத் தரிசனம் செய்தருளினார்கள். அங்கு



நின்றும் ஸ்ரீ மட்டுவார்குழலம்மை சந்நிதிக்கு எழுந்தருளி
அம்மையாருக்கு, சகஸ்ரநாம அர்ச்சனை செய்வித்துப் பட்டாடை
சாத்தி, அபிராமியந்தாதிப் பாடல்கள் மனமுருக ஓதப்பெற்றுத்
தீபாராதனை தரிசனம் செய்தருளினார்கள். துர்க்கை சந்நிதியில்
திரிசதை அர்ச்சனை சிறப்புற நடந்தேறியது.

பின்னர், மகாசந்நிதானமவர்கள் மௌனமடாலயத்திற்கு
மிகச் சிறப்புடன் எழுந்தருளும்பொழுது, மலைக்கோயில் தேவஸ்
தானம் மானேஜிங்டிரஸ்டி அவர்களால் நூற்றுக்கால் மண்டபத்
தில் வரவேற்கப்பெற்றார்கள். ஆங்கே மகாசந்நிதானமவர்கள்
அன்பர்கள் மனமகிழ, அமைக்கப்பெற்ற பீடத்தில் வீற்றிருந்து
அருளினார்கள்.

அதுபோது, வித்துவான் திரு. தி. பட்டுச்சாமி ஓதுவார்
அவர்கள் மகாசந்நிதானமவர்களை வரவேற்று, தருமையாதீனத்
தின் பெருஞ்சிறப்பியல்புகளையும், மகாசந்நிதானமவர்கள் சைவ
சமய வளர்ச்சிக்கும்; அறவளர்ச்சிக்கும், தமிழ் வளர்ச்சிக்கும்
வழங்கியருளும் தனிப்பேரறங்களையும், சிறப்பாகத் திருக்குறள்
உரைவளம் வழங்கிய பேரருளையும் பாராட்டிப்பேசினர். அதனை
ஒட்டித் திரு. R. பஞ்சநதம்பிள்ளை அவர்களும் மகாசந்நிதானம்
அவர்களை வரவேற்றுப் பாராட்டிப்பேசினர். மகாசந்நிதானம்
அவர்கள் பாராட்டுரைகட்கு விடைவழங்கும் முகத்தால் தங்க
ளால் ஆகவேண்டுவன மிகப் பல இருக்கின்றன என்றும்,
இதுவரை இயற்றியருளியவை மிகச் சிலவேயாகும் என்றும்
இனி நிறைவேற்றப்படவேண்டுவனவற்றிற்கும் இறையருள்
வேண்டும் என்றும், அவ்விறையருள் பெற இறைபணிநிற்றல்
வேண்டும் என்றும் கூறி, நல்லுரை வழங்கியருளினார்கள்.

பின்னர், திருச்சிராப்பள்ளி நகராட்சி ஆணையாளர், திரு.
K. இராமலிங்க முதலியார் அவர்கள் மகாசந்நிதானமவர்களை
வணங்கி வாழ்த்தி, "அன்பர்களே! நமக்கு மகாசந்நிதானம்
அவர்கள் தோத்திர சாத்திரங்களால் இறைபணிநிற்றலைப்பற்றி
உள்ளத்தில் ஊறுமாறு எடுத்துக்கூறியருளிய ஆசிமொழிகளாகிய
பொன்மொழிகளைப் போற்றி மேற்கொள்ளல்வேண்டும்" என்று
வேண்டினர். அதன்பின், 'தென்னாடுடைய சிவனே போற்றி;

எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்ற பெருமுழக்கத்துடன் மகாசந்நிதானமவர்கள் இரவு 9மணிக்கு மௌன மடாலயத்திற்கு எழுந்தருளினார்கள்.

இரவு $9\frac{3}{4}$மணிக்கு, மகாசந்நிதானமவர்கள் திருவானைக்காவிற்கு அடியார், அன்பர் முதலிய குழாங்களுடன் எழுந்தருளினார்கள். திருவானைக்கா ஸ்ரீ அகிலாண்டேசுவரியம்மை சமேத ஸ்ரீ ஜம்புகேசுவரசுவாமி தேவஸ்தான இறைபணியாளர், நகரப் பெருமக்கள் பலருடன் மகாசந்நிதானமவர்களை முறைப்படி ஆலயமரியாதையுடன் வரவேற்க, ஸ்ரீ அகிலாண்டேசுவரியம்மை சந்நிதிக்கு எழுந்தருளினார்கள். யாவும் முன்னேற்பாடாகச் செய்யப்பட்டிருந்தன. உடனே ஸ்ரீ அகிலாண்டேசுவரியம்மைக்கு நவசக்தி சகஸ்ரநாம அர்ச்சனை வெகு சிறப்பாகச் செய்விக்கப் பெற்று, அபிராமியந்தாதி என்னும் நூல் முழுமையும் முறையாகப் பல அன்பர்களும் கேட்டு மனமுருக ஓதப்பெற்றது. பின்பு, இறைவிக்குப் பட்டாடைசாத்தி தீபாராதனைகள் செய்யப் பெற்றன. அதன்பின்னர், ஸ்ரீ ஜம்புகேசுவரசுவாமி சந்நிதியில் ஜம்புலிங்கப்பெருமானுக்கு விசேட அர்ச்சனை செய்யப்பெற்றுப் பட்டாடை சாத்தப்பெற்று, தீபாராதனை செய்யப்பெற்றது. அங்கு, இரவு சுமார் 11மணிக்கு நைவேத்திய பிரசாதங்கள் அன்பர்களுக்கும், சுமார் 200 ஏழைமக்களுக்கும் மிகுதியாக விநியோகம் செய்யப்பெற்றன.

பிறகு, மகாசந்நிதானமவர்கள் மௌனமடாலயத்திற்கு எழுந்தருளி, அன்பர்களுக்கும் புலவர்களுக்கும் பட்டாடை முதலிய சன்மானங்கள் வழங்கியருளினார்கள். இரவு ஒருமணி அளவில் மகாசந்நிதானமவர்கள் தருமையம்பதிக்கு எழுந்தருளினார்கள்.

குருஞானசம்பந்தர் திருவடி வாழ்க !

தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்

# ஆசியுரை

2-12-51 ஞாயிற்றுக்கிழமையன்று திருக்குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டம், வழிபாட்டிற்காகத் தருமை வந்தபோது, ஆதீனப் பல்கலைக் கல்லூரி குருஞானசம்பந்தர் கழகச் சார்பில் நடைபெற்ற கூட்டத்தில் திருவாய்மலர்ந்தருளியது.

சைவப்பெருமக்களே ! சிவநேயச்செல்வர்களே!

சைவப்பெருந் தொண்டர்களாகிய உங்களுக்குச் செந்தமிழ்ச் சொக்கர் திருவருள் என்றும் உண்டாவதாக. இதைத்தவிர நான் வேறு ஒன்றும் சொல்ல வரவில்லை. ஆனால் இப்பொழுது முறையாகப் பேசிய ஒவ்வொருவரும் இறைவனைக் கண்ட காட்சியால் வாய்மொழி பல புகன்றனர். அதனை அன்பர் சுந்தரேசன் செட்டியார் அவர்கள் விழ்ந்து காட்டினார்கள். நான் இருந்து காட்டினேன். இந்த உணர்ச்சி தான் மணிவாசகப்பெருமானை,

"அம்மையெனக்கு அருளியவாறு ஆர்பெறுவார்"

என்று சொல்லச் செய்தது. இந்த நிலையில் இருந்து கொண்டு அந்த நிலையைத் தேடவேண்டுமேயல்லாது இந்த நிலையையே கருதிக்கொண்டிருத்தல் கூடாது. இந்த நிலையில் இருந்துகொண்டு அந்த நிலையைத் தேடவேண்டும் என்ற நோக்கத்தினாலே,

என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே! இருங்கடல்வையத்து
முன்னை நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரிசூழ் திருவலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னியாதரித்து ஏத்தியும் பாடியும் வழிபடு மதனாலே.

என்றருளிச்செய்யப்பெற்ற திருவலஞ்சுழியில் விநாயகப் பெருமான் சந்நிதியிலே இத்திருக்கூட்டம் தொடங்கப்

பெற்றதே தவிர, தருமபுர ஆதீன மகாசந்நிதானம் சொல்லுவதற்காகவோ அல்லது வேறு யாரும் சொல்லுவதற்காகவோ தொடங்கப்பெற்றதாக என்னுடைய எண்ணத்தில் நான் கருதவில்லை. ஆனால் உலகத்தில் என்ன என்ன நிகழ்ச்சிகள் உண்டாகவேண்டுமோ, யார்யாரைக்கொண்டு இயக்க வேண்டுமோ அவ்வந் நிகழ்ச்சிகளை அவ்வக் காலத்தில் திருவருள் இயக்கிக் கொண்டுதான் இருக்கிறது. அவனன்றி ஓர் அணுவும் அசையாது. மெய்யன்பர்களாகிய P. T. குமாரசாமிச் செட்டியார் அவர்களும், சுந்தரேசன் செட்டியார் அவர்களும், சிவகுருநாதன் செட்டியார் அவர்களுமாகிய இம் மூன்றுபேர்களும் இத்திருக்கூட்டத்தைத் திருவருள் துணையால் இயக்கிக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே திருக்கூட்டம் சிறப்பாக நடைபெற்று வருகிறதென்றால் காரணம் அவர்கள் பெருமுயற்சியே!

"அவன் அருளாலே அவன் தாள் வணங்கி" என்ற நிலையிலே ஆண்டவன் திருவருளாலே இத்திருக்கூட்டம் தொடங்கப்பெற்றது என்று கொள்ளுவதுதான் முறை. அவன் உள்நின்று உணர்த்துகிறான். அவன் திருவருளினாலே அந்த நிலையை அடைந்திருக்கிறோம். அதற்காக நாம் நாள்தோறும் என்ன செய்கின்றோம் என்னசெய்ய வேண்டும் என்ற எண்ணம் நம்மிடையே எழவேண்டும். அப்படி எழுந்தால்தான் நாம் ஏதோ அருமையான பிறவி எடுத்திருக்கிறோமே அந்தப் பிறவியின் பயனை அடைந்தவர்களாவோம். பிறவிப்பயனை எய்தற்கு உறு துணையாக இருக்கிறது இச்சிவனடியார் திருக்கூட்டம். இதிலே அடியார்கள் கூட்டம் இன்னும் அதிகமாகப் பெருகவேண்டும் இறை வழிபாடு ஆற்ற வேண்டும்.

தொண்டர்காள்! தூசிசெல்லீர் பத்தர்காள் சூழப் போகீர்
அண்டர் நாடு ஆள்வோம் நாம் அல்லற்படை வாராமே.

என்று திருப்படையெழுச்சிபாடும் நிலையில் தொண்டர்கள் கூட்டம் பெருகவேண்டும்.



மாணவர்களுக்கு - அதிலும் தமிழ்க்கல்லூரி மாணவர்களுக்கு ஒன்றுசொல்ல என் உள்ளம் விழைகிறது. 'உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதிலும் அச்சமில்லை. அச்சமில்லை' என்று மாணவர் ஒருவர் சொன்னார். அந்தப் பாரதியாருக்கும் கருத்துக் கொடுத்தவர் யார்? நம் அப்பரடிகளல்லவா! அதனைச் சிந்தித்தால் இதனையும் ஒருபடி மிஞ்சுகிறது அந்தப்பாடல்.

மலையே வந்து வீழினும் மனிதர்காள்!
நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவ னாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே

என்பது அடிகள் வாக்கு. இந்த அப்பரடிகள் மக்களை அறைகூவி அழைக்கிறார். மனிதர்காள்! இங்கே வாருங்கள் என்று. அழைத்து என்னசொல்கிறார் பாருங்கள். கனி தந்தால் கனியை உண்ணவும்வல்லீரோ? என்கிறார். கனி உண்ணத் தெரியாத மக்கள் யாரும் இருக்கமாட்டார்கள் என்பது அவருக்குத் தெரியாதா? தெரியும். இருந்தாலும் இக்கனியை உண்ணுவதற்கு மக்கள் அறியாது அலைகின்றார்களே என்றுதான் இரங்குகிறார். என்ன இரக்கக்குறிப்புபாருங்கள். மக்களை அன்போடு, கருணையோடு அழைத்துப் 'புனிதன் பொற்கழல் ஈசன் எனும்கனி இனிது' உண்ணுங்கள் என்று கூறுகிறார். எல்லோரும் ஆண்டவனுக்குச் சேவை செய்யவே பிறந்தோம் என்ற எண்ணம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் எழவேண்டும். அப்படிப்பட்டவர்களைத் தான் சைவப் பெரியார்கள், தொண்டர்கள் எனக் கூறுதல் அமையும். இத்தகைய பாடல்கள் தெய்வத் தமிழல்லவா?

தெய்வத் தமிழோ கலைப்பொக்கிஷமாக விளங்குகிறது; எடுக்க எடுக்கக் குறையாத பொருள்வளம் உடையது. நாம் காட்டுகின்ற மேற்கோள்கள் எல்லாவற்றிற்கும் இத் தெய்வத்தமிழ் இடந்தந்து நிற்கும். நம் நாட்டுக் கலைப் பொக்கிஷங்களைப் பிறநாட்டார் மொழி

பெயர்த்தும், விரும்பிப் படித்தும் பயன் பெறுகின்றனர்.
ஆனால் நாமோ நம்மிடம் உள்ள கலைப்பொருளை மறந்து
பிறநாட்டு மொழியாசிரியர்கள் கூற்றை மேற்கோளாக
எடுத்துக் கூறுகிறோம். நம்மிடம் சரக்கு இல்லை
என்றால் பிறர் கையை எதிர்பார்க்க வேண்டியது
தான். நம்மிடம் பழங்காலச் செல்வம் எவ்வளவோ
இருக்கின்றது. அவைகளை வைத்துக்கொண்டு பிறர்
கையை எதிர்பார்ப்பது கூடாதல்லவா? "கனியிருக்கக்
காய்கவர்ந்த கள்வனேனே" "கரும்பிருக்க இரும்பு
கடித்து எய்த்தவாறே" என்று நம் பெரியோர்கள்
கூறியிருப்பது போலத்தான் இந்நிலை இருக்கிறது.
நம்மிடம் இருக்கின்ற மேற்கோள்கள் ஆனந்தமாக
இல்லையா? அழகாக இல்லையா? நம் நாட்டுச் சரக்கைப்
பிறநாட்டுக்காரர்கள் எடுத்துச் சொல்லும்பொழுது நாம்
ஏன் நம்முடைய செல்வத்தை நாமே பயன்படுத்தக்
கூடாது. ஏன் பிறர் கையை எதிர்பார்க்க வேண்டும்?
ஒன்று பாருங்கள்.

"நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்"

என்று அப்பர்சுவாமிகள் கூறினாரே வீரவுரை. அது
போல நமனுக்கு அஞ்சோம் என்று வேறு யாராவது
கூறியிருக்கின்றார்களா? இன்றளவும் இல்லையே. அப்பர்
அடிகள்தான் அதைச் சொல்லி இருக்கிறார்.

அடியார்கள் ஆண்டவனிடம் சென்று நிஷ்காமிய
மாக வழிபடுதல் வேண்டும். இது வேண்டும், அது வேண்
டும், மோட்சம் வேண்டும் என்றெல்லாம் ஒன்றை
வேண்டுவது காமியமாகும். ஆதலினால்தான் சேக்கிழார்
பெருமான் 'வீடும் வேண்டா விறலின் விளங்கினார்'
என்று திருக்கூட்டச் சிறப்பில் குறிப்பிடுகிறார். ஆகவே
இறைவனுடைய திருவருள் ஒன்றே வேண்டப்பெறுவது.

இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின் வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும் நான் மகிழ்ந்து பாடி
அறவா! நீ ஆடும்போது உன் அடியின்கீழ் இருக்க.



என்று காரைக்காலம்மையார் வேண்டிய அந்த நிலை
சிவனடியார்களுக்கு இருக்க வேண்டும்.

திருக்குற்றால புராணத்திலே ஒரு செய்யுள். கடவுள்
சர்வ வியாபகமாக எங்கும் நிறைந்திருக்கிறார். உரை
சேரும் எண்பத்துநான்கு நூறாயிரமாம் யோனிபேதம்
நிரைசேரப் படைத்து அவற்றின் உயிர்க்குயிராய்
அங்கங்கே நின்று அருள்புரிபவன் அல்லவா இறைவன்.
அந்தநிலையைக் கவிராயர் அழகாக சித்திரித்துக் காட்டு
கின்றார் பாருங்கள்.

ஈயறியாப் பசுந்தேனே எழுத்தறியா மறைப்பொருளே
காயறியாச் செழுங்கனியே கற்பகத்தின் பசுங்கொழுந்தே
தாயறியாக் கருவிலிருந்து அமுதூட்டும் தாய்த்துணையே
நீ அறியாச் செயலுண்டோ நிகிலபரம் பராமூர்த்தி.

என்று கூறுகிறார். அப்பேர்ப்பட்ட ஒரு பரம்பொருள்
இருக்கும் பொழுது நாம் ஏன் பிறரை நாடிச் செல்ல
வேண்டும்? இப்பாடலில் மற்றொன்றையும் நாம் சிந்திக்க
வேண்டும். "தாயறியாக் கருவிலிருந்து அமுதூட்டும்
தாய்த்துணையே" என்றபோது "உருத்தெரியாக்
காலத்து என் உள் புகுந்து என் உளம் மன்னிக்
கருத்திருத்தி ஊன்புக்குக் கருணையினால் ஆண்டுகொண்ட
திருத்துருத்திமேயானை" என்று மணிவாசகர் அருளிச்
செய்த பாசுரம் நினைவுக்கு வருகிறது. அத்தகைய
பரம்பொருளாகிய சிவபெருமானை அருச்சனை செய்யாத
வர்கள் உண்டா? கிடையாது. ஆனால் சிவபெருமான்
யாரையாவது அருச்சனை செய்தது உண்டா? இல்லை.
அத்தகைய இறைவனின் அருள் வேண்டுமென்று நாம்
வழிபாடு செய்யும்போது நம்முடைய எண்ணம்
முதலியன எப்படி இருக்கவேண்டும் என்பதைச்
சேரமான்பெருமாள் செப்புகிறார் பாருங்கள்.

ஒருவன் ஆண்டவன் முன்பு ஒரு பூஞ்செடியாக
ஆதல் வேண்டுமாம். எப்படி? நெஞ்சந்தான் தளிர்;
முகம் மலர்; மலரில் தேனிருக்கவேண்டுமே என்றால்
தேன் உண்டுதான். அதுதான் ஆனந்தக்கண்ணீர்

(மலருக்குக் கள்ளாகிய நீர்) கண்ணீர் பெருக வேண்டும்.
தளிர், மலர், தேன் எல்லாம் இருக்கின்றது. அவை
மட்டுமா? மலரிருந்தால் அரும்பு இருக்காதா. அதுவும்
உண்டு. அது எது? குவித்தகரம். இதுமட்டும் போதாது.
அடிபணிந்து வணங்கவேண்டும். பயன் இல்லாவிட்டால்
காரியம் செய்யமுடியுமா? முடியாதே. வணங்கினல்
என்னபயன்? வானகம்பெறலாம். பாடலைப்பார்ப்போம்.

நெஞ்சம் தளிர்விடக் கண்ணீர் ததும்ப முகமலர
அஞ்செங் கரதலம் கூம்பஅட் டாங்கம் அடிபணிந்து
தஞ்சொன் மலரா லணிய வல்லார்கட்குத் தாழ்சடையான்
வஞ்சங் கடிந்து திருத்திவைத்தான் பெரு வானகமே.

இதைச் சொல்லிய உடனே மற்றொரு பாடல் நினைவுக்கு
வருகிறது. அதுதான் திருவாசகத்தில் ஒருவாசகம்.

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து உன் விரையார்கழற்கு என்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பிவெதும்பி உள்ளம்
பொய்தான் தவிர்ந்து உன்னைப்போற்றி சயசய போற்றி என்னும்
கைதான் நெகிழவிடேன் உடையாய் என்னைக் கண்டுகொள்ளே.

இப்பாடல்களெல்லாம் இறைவழிபாட்டில் உண்டா
கும் மெய்ப்பாடுகளைத்தானே அறிவிக்கின்றன. தெய்வத்
தமிழ் தெய்வமணம் வீசிக்கொண்டுதானே இருக்கும்.

இத்தகைய தெய்வத் தமிழைத்தான் "சொற்றமிழ்
பாடுக என்றார் தூமறை பாடும் வாயார்" என்று சேக்
கிழார் பெருமான் சொல்லுகிறார். அப்பேர்ப்பட்ட
ஆண்டவனுடைய திருவுருவத்தைச் சேரமான் மற்றொரு
பாடலில் படம் பிடித்துக் காட்டுகிறார். நல்ல சிறந்த
பாடல் அது. அதையும் சொல்லிவிடுகிறேன்.

விரிகின்ற ஞாயிறுபோன்றது மேனி; அஞ்ஞாயிறு சூழ்ந்(து)
எரிகின்ற வெங்கதிர் ஒத்தது செஞ்சடை; அச்சடைக்கீழ்ச்
சுரிகின்ற காரிருள் போன்றது கண்டம்; அக்காரிருட்கீழ்ப்
புரிகின்ற வெண்முகில் போன்றுளதால் எந்தை ஒண்பொடியே.

ஆகவே எல்லாம்வல்ல இறைவனை - இறைவன்
திருவருளைப்பெற்று நீடுவாழவேண்டும் என்றமுறையிலே
ஆசி கூறியதாக எண்ணி அமைகின்றேன்.

திருக்கடவூர்

# சோமவார வழிபாடு.

கார்த்திகைமுதற்சோமவாரம். 19-11-51மாலை5மணி.
ஸ்ரீ அமிர்தகடேசர் ஆலயத்தில் ஒரு பரபரப்பு. எங்கும்
சிவமுழக்கம். வருவாரும் போவாரும் வாயுதிர்த்த பக்தி
மொழிகள் பரவசப்படுத்தின. தருமையாதீன ஸ்ரீ-ல-ஸ்ரீ
மகாசந்நிதானமவர்கள் கோயிலுக்கு முன்னதாக எழுந்
தருளினர்கள். ஓசையொலியால் குழல்வழி உள்ளத்தை
நிறைத்துக்கொண்டிருந்தார் ஆதீன நாதசுர வித்வான்.
சந்நிதானமவர்கள் இசைலயத்தில் ஈடுபட்டபோதிலும்
கூட, அவர்கள் மனமும் வாயும் நமச்சிவாய வாழ்க;
அபிராமி அருள்பொலிக என்றுதான் தியானித்துக்
கொண்டிருந்தன.

மணி ஆறு. திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ
மகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளினர்கள். அரகர
முழக்கம் ஆலயத்தை நிறைத்தது. இரண்டு சந்நிதானங்
களும் கண்டபோதே உள்ளம் களித்தார்கள்; பொன்
னடை போர்த்தி மகிழ்ந்தார்கள்; வழிபாட்டைத் தொடங்
கினர்கள். ஸ்ரீ அமிர்தகடேசர் சந்நிதியில் வழிபாடு
நடந்தது. திருமுறை ஓதுவார்கள் கடவூர் உத்தமனின்
கனிவுத்தமிழ் பாடிப் பரவினர்கள். கண்டவர் மகிழ்ந்
தனர். 'திருநீறும் கண்டிகையும் தேயமெலாம் பரவுக'
என முழங்கினர்கள். அன்புவெள்ளத்திலே அனைவரும்
நீந்தியவாறே அபிராமி திருமுன் வந்துசேரவே, ஆதீன
தேவத்தான ஓதுவாமூர்த்திகள் 'உதிக்கின்ற செங்கதிர்
தொடங்கித் தாயின் புகழைப் பரவத்தொடங்கினர்கள்.
அம்மைக்கு அலங்காரத்தில் அன்று ஒரு தனிச்சிறப்பு.
திருமேனியில் ஒரு பிரகாசம். துறைசை மகாசந்நிதான
மும், தருமை மகாசந்நிதானமும் மெய்ம்மயிர்சிலிர்த்து
வழிபட்ட சிறப்பாலோ என்னவோ அபிராமியம்மை
யாகிய அருள்தெய்வத்தின் அழகு அன்று அதிகப்பட்
டிருந்தது. வழிபாடு முடிந்தது. அபிராமி அமிர்தகடேச

மூர்த்திகளைக் கரங்கூப்பி வழிபட்டவாறே இருவர்களும்
கட்டளைமடம் அடைந்தார்கள்.

கட்டளைமடத்தில், அடியவர் அன்பர்களின் பெருங்
கூட்டம். அருள்தெய்வங்களின் வரவை அகமலர்ந்து
வரவேற்றது. இருபீடங்களிலும் இருவரும் வீற்றிருந்த
காட்சி, சிவபெருமானே இருபதாம் நூற்றாண்டிலே
கண்ணுதலும் கண்டக்கறையும் கரந்தருளி மண்ணிடை
யில் மாக்கள் மலமகற்றும் பொருட்டுத் தவவுருவாக
ஈருடலம் தாங்கி எழுந்தருளினன் என்ற உள்ள
நினைவை எழுப்பியது. இருவர்க்கும் ஓர் வரவேற்புரை
தேவஸ்தானச் சார்பில், சீகாழி தேவஸ்தான கட்டளை
விசாரணை வித்வான் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான்
சுவாமிகளவர்களால் வாசித்தளிக்கப்பெற்றது. திப்பிய
புலமைச் சுப்பிரமணியதேசிகர் என்று திருநாமம்பெற்ற
இரு சந்நிதானங்களும் அடியவர்களுக்கு ஆசிவழங்கி,
திருநீறளித்துச் சிறப்பித்தார்கள்.

திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீமகாசந்நிதானம்
அவர்களையும், தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீமகாசந்நிதானம்
அவர்களையும் ஒருங்குகாணக் கூட்டுவித்த முதற்சோம
வாரமே! நீ வாழி! நின்புகழ் வாழி!! புண்ணியமும்
வாழி!!! என ஏத்தினர் கடலூர் மக்கள்.

மூன்றாம் சோமவாரத்தன்று திருவண்ணாமலை
ஆதீனம் குன்றக்குடி ஸ்ரீ-ல-ஸ்ரீ தெய்வசிகாமணி
அருணாசல தேசிக சுவாமிகள் அவர்கள் தரிசனத்திற்கு
எழுந்தருளினார்கள். கோயில்மரியாதையுடன் முறைப்படி
வழிபாடு நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டது. வழிபாடு
நடந்தபின் தருமையாதீன ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம்
அவர்களுடன் கட்டளைமடத்தில் நெடுநேரம் அளவளாவி
யிருந்து பின் விடைபெற்றுக்கொண்டார்கள்.



## தருமபுர ஆதீனத்தில் : குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டம்

2—12—51 காலை 8-மணிக்கெல்லாம் தருமபுர
ஆதீனத்தின் தென்மேற்கு எல்லையிலுள்ள சண்முகம்
வளைவுக்கருகில் ஆதீனக்கல்வி நிலையங்களில் பயிலும்
மாணவர்களும், ஆசிரியர்களும், ஆதீன அடியார்களும்,
மற்றுமுள்ள மெய்யன்பர்களும் குழுமியிருந்தார்கள்.
திருக்கூட்டத்தை வரவேற்கத் தயாராக இருந்தார்கள்.
திருக்கூட்டத்து அடியார்களும் வெண்ணீறு துதைந்த
பொன்மேனியர்களாய், தாழ்வடம் தரித்தவர்களாய்,
நாயகன் சேவடி தைவரும் சிந்தையாளர்களாய், பாற்
கடல் திரண்டாலொப்ப, சிவநாம முழக்கத்துடன்
9-மணிக்கெல்லாம் வந்து சேர்ந்தார்கள். இருந்தவர்கள்
வந்தவர்களை வரவேற்றார்கள். இருகூட்டமும் ஒன்றா
யது. நகர்வலமாக மடாலயத்திற்கு வந்தார்கள். ஸ்ரீ
சொக்கலிங்கப்பெருமான் வழிபாட்டை நிறைவேற்றிக்
கொண்டார்கள். சிற்றுண்டியும் அவர்களுக்கு அளிக்கப்
பெற்றது. பின் தருமபுரீசுவரராலய வழிபாடு; அடுத்தது
ஞானபுரீசுவரராலய வழிபாடு. வழிபாடுகள் விதிப்படி
நடந்தன. மணியும் 11 ஆயிற்று.

ஆதீனக் கல்லூரி குருஞானசம்பந்தர் கழகத்தின்
சார்பில் ஆதீன மடாலய முகப்பில் சிறப்புக் கூட்டத்
திற்கு ஏற்பாடு செய்யப்பெற்றது. ஒலிபெருக்கியும்
அமைக்கப்பட்டிருந்தது. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம்
அவர்களும் எழுந்தருளியானார்கள். திருமுறையும் ஓதப்
பெற்றது. சிவனடியார் திருக்கூட்டத்தலைவர் உயர்திரு
வாளர் P. T. S. குமாரசாமிச்செட்டியார் அவர்கள் கழக
அமைச்சரின் விருப்பப்படி சிறப்புக் கூட்டத்திற்குத்
தலைமை வகித்தார்கள். தலைவரின் திருவேடப் பொலிவு
“சிந்தை யிடையறா அன்பும் திருமேனிதனில் அசைவும்
வந்திழிகண்ணீர் மழையும் வடிவிற்பொலி திருநீறும்”
என்ற பகுதியை அனைவர்க்கும் நினைவூட்டிற்று. இவர்கள்
ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்குத் தமது அடி
பணிந்த வணக்கத்தைச் செலுத்திக் கொண்டு பிறகு
தலைமையுரையாகச் சில வார்த்தைகள் பேசினார்கள்.
அதில் ‘மூன்று ஆண்டுகட்கு முன்னர் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா
சந்நிதானம் அவர்கள் திருவலஞ்சுழி விநாயகப் பெரு
மான் திருமுன்பு இத் திருக்கூட்டத்தைத் தொடங்கி

வைத்து ஆசியருளினார்கள். அவர்களால் தொடங்கி வைக்கப்பெற்ற இத்திருக்கூட்டம் நாடொறும் பெருகிக் கொண்டே வருகிறது. இது அவர்கள் அஸ்தவிசேஷம். இப்பொழுது 4-வது ஆண்டு 47-வது ஆதிவார வழிபாடு இங்கு நடைபெறுகிறது. ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானை வழிபட்டோம். தருமபுரீசுவரர், ஞானபுரீசுவரர் ஆலய வழிபாடுகளும் முடிந்தன. இறைவழிபாட்டுடன் குரு வழிபாடும் செய்தோம். சென்ற வழிபாடு திருப்பெருந் துறையில் நடைபெற்றது. அங்கு இறைவன் குரு வடிவந்தாங்கிக் குருந்த மரத்தின் கீழிருந்து அருள் புரிகின்றதைக் கண்டு தரிசித்தோம். அந்தக் காட்சியைத் தான் இங்கு இப்பொழுதும் காண்கிறோம் என்றால் மிகையாகாது. அந்த முறையிலே இன்று இந்த பாக்கியம் எங்கட்குக் கிடைத்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் ஆதீனக் கல்லூரி ஸ்ரீ குருஞானசம்பந்தர் கழகக் கூட்டத்தில் கலந்து கொள்ளும் வாய்ப்பும் கிடைத்திருக்கிறது' என்றெல்லாம் விரிவாகப்பேசி, முன் கூட்ட அறிக்கையைப் படிக்குமாறு கழகச் செயலாளர்க்கும் ஆணை தந்தனர். அறிக்கையும் படிக்கப்பெற்றது.

பின்னர் நிகழ்ச்சியிற் குறித்தபடி ஆதீனக்கல்லூரி வித்துவான் பகுதி மாணவர்கள் அருணாசலம் "தெய்வத் தமிழ்" என்பதுபற்றியும், சேனாபதி "அப்பர்காலத்து அரசியல்" என்பதுபற்றியும், சிங்காரவேலன் "தளராத பேரன்பு" என்பதுபற்றியும் சொற்பொழிவு நிகழ்த்தினர். திருக்கூட்டத்தின் இன்றியமையாப் பொறுப்பாளரும் சிவநேசச் செல்வருமாகிய பேரன்பர் திரு. S. சுந்தரேசஞ் செட்டியார் B. A., L. T., (குடந்தை முனிசிபல் ஹைஸ்கூல் தலைமையாசிரியர்) அவர்கள் சமயப்பாதுகாவல் என்னும் தலைப்பில் சில உரைகள் மொழிந்தார்கள். அடுத்து ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஆசியுரை அருளினார்கள். பின் திருக்கூட்டச் செயலாளர் திரு. சிவகுருநாதன் செட்டியார் அவர்கள் வழக்கம்போல அடுத்த வாரவழிபாட்டு நிகழ்ச்சிபற்றிய அறிவிப்பை அறிவிக்க, கடவுள் வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிந்தது. மணி $1\frac{1}{2}$. திருக்கூட்டத்து அடியார் பெருமக்கள் அனைவரும் உடனிருக்க மாகேசுவர பூசை சிறப்பாக நடைபெற்றது.

---

## திருக்கடவூர் முதற்சோமவார வழிபாடு:



வலம்புரிச்சங்கம் வலம் வருகிறது.

## திருக்கடவூர் முதற்சோமவார வழிபாடு:



தருமை மகாசந்நிதானமும், துறைசை மகாசந்நிதானமும்.



# வரவேற்பு மலர்.

[தருமபுர ஆதீன மகாசந்நிதானமும் துறைசை ஆதீன மகாசந்நிதானமும் திருக்கடவூர் முதற்சோமவார வழிபாட்டிற்கு 19-11-51 அன்று எழுந்தருளியானபோது தேவஸ்தானச்சார்பில் வாசித்தளித்தது.]

ஐயன் ஆலமர் செல்வன் றனக்கு
உய்ய உலகத் தேவரும் உவப்ப
வித்தும் இடுதல் வேண்டுமோ என்னும்
சித்தர் வள்ளுவர் சிறப்புரைக் குயர்வாய்
உயிரினும் சிறந்த ஒண்பொருள் தாலியை
உவப்புடன் கொடுத்து உயர்ந்ததூ பத்தை
நிவப்புற இட்டு நீணிதி பெற்றும்
துன்புறு சோழன் துயரம் நீங்கிட
இன்புறும் எழில்நிறை பனந்தாள் அண்ணலே
அன்பெனும் பாசம் அதனால் நிமிர்த்தும்
கன்மம் நீங்கிக் களிப்புறு கலையரும்
சைவசித் தாந்த சாத்திரந் தன்னுள்
கைமிகு களிற்றுப் படியார் அளித்த
உய்ய வந்த தேவநா யகரும்
பிறந்தநற் பதியாம் சிறந்தநற் கடவூர்
அமிர்த கடேசனை அபிரா மியுடன்
இமிழிசை யார்ப்பொடு இன்பமாய்க் காணக்
கயிலை வழிவரு குரவர்கள் இருவரும்
பயில வருதல் பண்புடன் உணர்ந்தனன்;
இத்தகு பேறிது மெத்துபல் புகழுறு
அரசரும் ஆளுடைப் பிள்ளையும் கலையர்
மடத்தினுள் அமர்ந்த மாண்பினை ஒக்குமால்;
ஒருபெயர் கொண்ட இருவர் நிலைமையும்
பரம்பொருள் ஒன்றெனத் திரமுற வுணர்த்தும்;
அணிமதி நாள்தனில் அமிர்த கடேசனை
அன்புடன் வணங்கும் அருள்மிகு குரவீர்!
இன்றேபோல்கநும் எழில்மிகும் இணைப்பு
நன்றே நாள்தொறும் நானிலத் தோங்குக
வருக சுப்பிர மணிய குரவர்காள்!
வாழ்க இருவரும் வளமார் சைவமும்
வாழ்கநன் னெறியும் வாழ்கபல் லாண்டே.

# தருமபுரம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் கழகம்

தருமபுர ஆதீனம் கீழ்த்திசைப்பல்கலைக் கல்லூரி ஸ்ரீ குருஞானசம்பந்தர் கழகத்தில் 6—12—51 மாலை 4-மணிக்குச் சென்னை முன்னாள்மேயர் உயர்திருவாளர் சு. இராமசாமி நாயுடு அவர்களின் சீரிய தலைமையில் ஓர்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு மாணவர்கள் மட்டுமின்றி ஆதீன நிர்வாகிகள் பலரும் வந்து சிறப்பித்தனர்.

தலைவர் முன்னுரைக்குப்பின் மாணவர் எஸ். சுந்தரராசன் கல்வியும் கண்காட்சியும் என்ற தலைப்பில் பண்டைக்காட்சி, தற்காலக்காட்சி முதலியவற்றை ஒப்பிட்டும், கண்காட்சிச்சாலைகள், கல்விச்சாலைகள் இவைகளுக்குரிய இன்றியமையாத தொடர்பையும் எடுத்து விளக்கிப் பேசினர். அடுத்து தா. குருசாமி தமிழிசை என்றதலைப்பிலே தேவாரம்முதல் தெருப்பாட்டு ஈருக எடுத்துக் காட்டித் தமிழிசை இருக்கின்ற நிலைபற்றி விளக்கிக் கூறினர். பின்னர் ரெ. இராமானுசன் அல்லாதார் என்ற தலைப்பிலே மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ? என்பன போன்ற உதாரணங்களுடன் பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்றகுறட்பாடலை விளக்கிக் கூறினர். அடுத்து S. முத்துக்குமரசாமி சங்ககால அரசியல் என்பதுபற்றிப் பேசுகையில் சங்ககாலத்தில் நாடு இருந்த நிலையையும், மக்களை மன்னர்கள் மதித்த நிலையையும், புலவர்களைப் போற்றிய நிலையையும், நாட்டைப் போற்றிய நிலையையும், எடுத்துக் கூறினர். பின்னர் வடமொழிப்பகுதி மாணவர் B. கணேசன் ஒரேவரி என்ற தலைப்பிலே நாட்டு நடப்பை எடுத்துக் கூறினர். அடுத்து சிந்தனை என்ற தலைப்பிலே மாணவர் கூ. சா. ஒ. துரைராசன் பாண்டியன் அன்று சிந்திக்காத காரணத்தால்தான் கோவலன் கொலையுண்டான் என்றும், நல்லமைச்சர்கள் நாட்டிலே இருந்தும் சிந்தித்து இடித்துக் கூருத காரணத்தால்தான் அன்று இராவணன் அழிந்தான் என்றும் கூறி அதற்கு எடுத்துக்காட்டாகப் பலமேற்கோள்கள் எடுத்துக்கூறி மக்களுக்குச் சிந்தனை இன்றி



யமையாதது என்பதை வற்புறுத்தினர். பின்னர் திருவாரூர் ராஜன்கட்டளை கட்டளைவிசாரணை ஸ்ரீமத். சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள், வித்துவான் ஸ்ரீமத். இராமலிங்கத்தம்பிரான் சுவாமிகள், ஸ்ரீமத். சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் ஆகியோர்கள் மாணவர்களுக்கு அறிவுரை வழங்கினர்.

அடுத்தபடி, ஷை கல்லூரிப்பேராசிரியர் வித்துவான் திரு. வி. சா. குருசாமி, கல்லூரித் துணைத்தலைவர் திரு. ச. தண்டபாணிதேசிகர் ஆகிய இருவர்களும் மாணவர்கள் பேச்சுக்களில் கண்ட குறைநிறைகளைக் குறிப்பிட்டுப் பேசினர்கள்.

தலைவரவர்கள் முடிவுரையாகப் பேசும்பொழுது இன்றைய மாணவர்கள் அரசியலில் கலந்து அடுக்குமொழி கூற ஆசைப்படுகிருர்கள், ஆனல் அரசியல் தத்துவங்களை நன்கு தெரிந்துகொண்ட பின்னரே தங்கள் வாழ்க்கையைக் கருத்தில் சிந்தித்துத் தெரிந்தவைகளை எடுத்துக்கூறவேண்டும் என்றும், வித்துவான் பட்டம்பெற்று வெளியேறும் மாணவர்கள் தங்கள் நிலை தமிழாசிரியர்நிலையே என்று எண்ணுமல் 'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' என்றமுறையிலே அரசியலில் ஈடுபட்டுத் தொண்டாற்றும் தகுதியையும் பெறுதல் வேண்டும் என்றும், எதிர்கால வாழ்க்கையைச் செம்மையாக நடத்தத் தகுதிபெறவேண்டுமென்றும், ஒவ்வொருவரும் பண்டைத்தமிழ்இலக்கியங்களிலிருந்தே மேற்கோள்கள் கூறி அவற்றின் சிறப்பை மக்களிடையே பரவச்செய்தல் வேண்டுமென்றும், தமிழ் மாணவர்கள் வெறும் நூலறிவோடுமட்டும் நின்றுவிடாமல் சரித்திரவரலாறுகளையும் உண்மைகளையும் நேரிற்கண்டுவர சுற்றுப்பிரயாணம் சென்று வருதல் வேண்டும் என்றும் சொல்லிக் கீழைநாட்டுச் சுற்றுப்பிரயாணத்திலே தாம்கண்ட அநுபவங்களையும் எடுத்துக் கூறினர்கள்.

பின்னர் கழகச்செயலாளர் ப. சுப்பையா நன்றி கூற, எஸ். தியாகராசன் கடவுள் வாழ்த்துக் கூற கூட்டம் இனிது முடிவுற்றது.

---

Programme of Trainining Classes.

Tanjore District,

Mayuram Revenue Division

## TALUK AND SUB TALUK IN THE DIVISION.

| Name of the Taluk or Sub Taluk. | Centre where the classes will be held. | Nos. of the batches which will be trained at the centre in col. 2 | Dates of the three classes for each Batch. | Designation of officer by whom the class on each date will be conducted. |
|---|---|---|---|---|
| Mayuram Taluk including the Sub-Taluk of Tranquebar. | Municipal High School Pattamangala Street, Mayavaram | I & II batches (in two sessions) 9 a.m. to 12 noon 2 p.m. to 5 p.m. | 16—12—51 (III Class) | Tahsildar, Mayuram. |
| do. | Dy. Thasildar's office, Mayuram. | do. | 16—12—51 (III class) | Election Dy. Tahsildar, Mayuram. |
| Sirkali Taluk. | Sabanayaga Mudaliar Hindu High School, Shiyali. | do. | 16—12—51 (III Class) | Tahsildar and Election Deputy Tahsildar, Sirkali. |

(True copy)

(Sd.) N. RAGAVA,
Revenue Divisional Officer.

Page number not counted



மோகமாய் வீழ்தலும்” என்பதைப் புலப்படுத்துவதாம். முகிலும் - பூமியிலுள்ள பொருள்களையன்றி வானத்திலுள்ள மேகங்களும்; கம்பம் - நடுக்கம்; ககுபம் - திசைகள்; உம்பர் - தேவர்; பரிதி - சூரியன்; உலைந்தான் - நடுங்கினான். 17

காளி தேவிகை சரியுடல் சரத்தினாற் காணா
தாளி யன்னவன் புரிந்துவா கயுதமங் கடைந்தே
யோளி யுற்றிடும் பரிதிக ளாலொளித் திடலு
மாளு மன்னையாஞ் சண்டிகை சரங்களா லழித்தாள்.

கு - ரை: ஆளி அன்னவன் - நிசும்பனானவன்; கைசரி - சிங்கம்; காணாது புரிந்து - கண்ணுக்குத் தோன்றாதபடி மறைத்து; அயுதம் - பதினாயிரம், “பதினாயிரப் பெயரயுதமாகும்”; வாகு அடைந்து - தோள்களைப் பெற்று; ஓளி - வரிசை, ஒளியென்பதன் விகாரமுமாம்; பரிதிகள் - சக்கரப் படைகள்; ஒளித்திடலும் - மறைக்கவும்.

வி - ரை: நிசும்பனானவன் காளியும் தேவியும் சிங்கமும் ஆகிய மூவருடைய உடம்புகளும் கண்ணுக்குத் தோன்றாதபடி பாணங்களால் மறைத்து மேலும் சக்கரப் படைகளால் மறைக்கவும் தேவி அவற்றைத் தனது பாணங்களால் அழித்தாள் என்பது கருத்து. 18

பின்ன ரன்னவன் கதையெடுத் தடுத்தலும் பெரியாண்
மன்னு மைந்தசி யாற்பொடித் தாளவன் வலிசேர்
கொன்னு றுந்திரி சூலமேந் திடவமை குலவு
மன்ன வேதியா லிதயத்தைப் பிளந்தன ளன்றே.

கு - ரை: பெரியாள் - தேவி; மைந்து மன்னும் அசி - வலிமை பொருந்திய வாள்; பொடித்தாள் - நிசும்பனது கதையைப் பொடியாக்கினாள்; ஏந்திட - கையில் எடுக்கவும்; அம்மை - தேவி; அன்ன ஏதியால் - தன்னிடமுள்ள அதே திரிசூலத்தால்; இதயம் - நிசும்பனுடைய இருதயம்.

வி - ரை: ஏதி என்னும் ஆயுதப் பொதுப்பெயர் அன்ன என்னும் சுட்டினால் ஈண்டு திரிசூலத்தை உணர்த்திற்று. 19

பின்ன மாமுளத் தலத்தினிற் பெருவலி யொருவன்
வன்னி நேர்பவன் பிறந்தன்னை தன்னைநீ மண்ணி
லின்ன லற்றிட வோடுறாதே நில்லென் றிசைத்து
முன்ன ருற்றன னவன்சிர மசியினான் முறித்தாள்.

கு-ரை: பின்னம் - பிளவு; உளம்தலம் - இருதயம், கையைக் கைத்தலம் என்றாற்போல உளத்தை உளத்தலம் என்றார்; பெருவலி ஒருவன் - மிக்க வலிமையுடைய ஒரு பெருவீரன்; வன்னி நேர்பவன் - கோபத்தால் நெருப்பைப் போன்றவன், உக்கிரத்தால் எனினுமாம்; அன்னை தன்னை - தேவியைப்பார்த்து; ஓடுறாதே - ஓடாமல்; இசைத்து - சொல்லிக்கொண்டு; முன்னர் - தேவியின் திருமுன்பு; அசி - வாள்; முறித்தாள் - வெட்டினாள்.

வி-ரை: நிசும்பனது பிளந்த இருதயத்திலிருந்து ஒரு பெருவீரன் தோன்றித் தேவியின் திருமுன்பு போருக்குச் செல்லவும் தேவி அவனது தலையைத் தனது வாளினால் வெட்டி முறித்தாள் என்பது கருத்து. "இன்னலற்றிட வோடுறாதே நில்லென்றிசைத்து" என்றதனால் தேவி, தனக்குப்பயந்து போரில் ஓடிவிடுவள் என்பது வீரனுடைய கருத்துப்போலும். 20

தால மீமிசை யனையவன் விழுதலுந் தரஞ்செய்
கோல வாகன மாமரி தந்தத்தாற் கொடியோன்
பாலு றும்படை யழித்தது காளியும் பரிவாற்
சால வேதின்று குறைத்தன டானவர் படையை.

கு-ரை: தாலம் மீமிசை - பூமியின்மேல், மீமிசை, ஒரு பொருட் பன்மொழி; அனையவன் - அந்த வலிமையுள்ள வீரன்; விழுதலும் - இறந்து விழவும்; தரஞ்செய் - மேன்மைபொருந்திய; கோலம் - அழகு; வாகனம் ஆம் அரி - தேவியின் வாகனமாகிய சிங்கமானது; தந்தம் - கோரைப்பல்; படை - அசுரப்படைகளை; குறைத்தனள் - அழித்தாள்.

வி-ரை: சிங்கமும் காளியும் அசுரப்படைகளைக் கடித்துந் தின்றும் அழித்தார்கள் என்பது கருத்து. 21



பரமு றுஞ்சிவ தூதியு மவுணரைப் படுத்தாள்
வரனின் மந்திர பூதவா ரியின்மடி வித்தாண்
முருகன் பன்னியுஞ் சத்தியான் முடித்தனண் மூன்று
சிரமு றும்படை யான்மகே சன்மனை சிதைத்தாள்.

கு-ரை: பரம் - மேன்மை; படுத்தாள் - கொன்றாள்; வரன் இல் - பிரமதேவனுடைய இல்லாள், பிரமாணியானவள்; மந்திர; பூதவாரி - பிரணவமந்திரம் சம்பந்தமுவடய தீர்த்தம், மந்திரம் செபிக்கப்பெற்ற தீர்த்தத்தைத் தெளித்து; முருகன்பன்னி - குமாரசக்தி, கௌமாரி; சத்தி-வேல்; மகேசன்மனை-மாகேசுவரி. மூன்றுசிரம் உறும்படை - முத்தலை வேற்படை.

வி-ரை: அவுணரை என்னும் செயப்படுபொருளை வினைமுற்றுக்கள் எல்லாவற்றுடனும் கூட்டுக. 22

கோலியுந் துண்ட காதத்தாற் கொன்றனள் கோல
மாலி னங்கையு மாழியாற் படுத்தனள் வலிசேர்
சால வுன்னத நாரசிங் கியுநகந் தன்னான்
ஞால மீதழித் தனண்மருத் துவனெழி னங்கை.

கு-ரை: கோலி - வராகி; துண்டம் - மூக்கில்; காதத்தால் - தாக்குவதனால்; மாலின் நங்கை - வைணவி; ஆழி - சக்கரம்; நாரசிங்கி - நரசிங்க சக்தி; மருத்துவன் எழில் நங்கை - இந்திரசக்தி, ஐந்திரி.

வி-ரை: இச்செய்யுளிலும் அவுணரை என்னும் செயப்படுபொருளை வினைமுற்றுக்களுடன் கூட்டுக. 23

குலிச மாப்படை யாற்குறைத் தனள்சிவ தூதி
வலியு றும்வயப் போத்தொடு காளியு மற்றைச்
சலதி நேரசு ரப்படை யொழித்தனர் சாற்றிற்
குலவு மொன்பதாம் சருக்கமும் முடிந்தது குணத்தீர்.

கு-ரை: குலிசம் மா படை - வச்சிரம் என்னும் பெயர் உடைய சிறந்த ஆயுதம், சிவதூதியும் சிங்கமும் காளியும் மற்றுள்ள அசுரப்படைகள் எல்லாவற்றையும் அழித்தார்கள்; சலதிநேர் -

கடலைப்போன்ற; குணத்தீர் - நல்ல குணம் உடைய அரச வைசியர்களே.

வி - ரை: சிவதூதி வலியுறும் வயப்போத்தொடு காளியும்
மற்றைச் சத்திநேசுரப்படை ஒழித்தனர் என்பதில் இருதிணை
யும் கலந்து மிகுதியால் ஒழித்தனர் என்னும் உயர்திணைமுடிபைப்
பெற்றன. பெருமையாலும் அளவின்மையாலும் ஆரவாரத்தா
லும் அசுரப்படைக்குக் கடல் உவமையாயிற்று. "கரைபொரு 24
முடைத்திரைக் கடலந் தானையான்" என்பது நைடதம்.

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

## 10. சும்பன்வதையுரைத்த அத்தியாயம்

தன்பி னுநிசும் பன்னவ ணிறந்ததுந் தானை
என்பொ டிந்தவ ணிறந்ததும் சும்பனு மெறுழோன்
முன்பு நோக்கியே முனிந்தனை தன்னொடு மொழிவான்
றுன்ப ளித்திடுந் தருப்பமுற் றனையிவண் டோகாய்.

கு - றி: எறுழோன் - வலிமையுள்ளவன்; தன்பின் - தன்
தம்பி; அவண் - அப்போர்க்களத்தில்; தானை - சேனைகள்; என்பு
ஒடிந்து - உடல் சிதைந்து; அனை - அன்னை, தேவி; தருப்பம் -
கருவம், தோகாய் - மயில்போலும் சாயல் உடையவளே, தோகை 1
என்பது முதல்வேற்றுமை.

மற்றை யோர்வலித் துணையினல் வலியுடை யாணீ
அற்ற மின்றிய கருவமே ணடைகுதி யறைதி
இற்றை யென்றலும் தேவியு மூடகே ளிவண்டா
னுற்ற வெப்பொரு ளும்மெனை ஒழித்துள வோசொல்.

கு - ரை: மற்றையோர் - பிரமாணி முதலிய சத்திகளின்; வலி துணை - பலத்தின் உதவி; வலியுடையாள் - பலமுடையவள்; அற்றம் இன்றிய - குறைவு இல்லாத (மிகுதியான); இற்றை - இப்பொழுது; இவண் உற்ற - இவ்வுலகில் பொருந்தியுள்ள



அன்மை இன்மை எனப் பிரித்தோதியது என்னை எனின் இவை நின்றுழி நன்மை தீமை என்பன வற்றோடு வேறுபாடுடைய என்றதனால் இவற்றின் மேல் வரவு பெறும் பான்மை என்றுதல் பிறவாதல் கருதிப் போலும். உடைமை என்றும் நிலம் என்றும் ஓதாது வேற்றுமைப்பொருள்களை எடுத்து ஓதியது என்னை எனின், அப் பெயரடியாக வினைக்குறிப்பு வந்தவழி அவ் வேற்றுமைப்பொருளுணர்ச்சி உண்டு என்பது கருதிப்போலும்......கலத்தோனெனப் பொருள்பற்றி வந்த தெரிநிலைவினையுடையவனென இரண்டாவதன் பொருண்மையன்றோ எனின், அன்று; சொன்முடிந்து நின்றவழி உணர்ச்சி அவ்வாறாயினும் உடைமைக்கு அடியாயுள்ளது ஆறுவது என்பது கருதிப்போலும்.

அறுவகைப் பெயராவன - பண்புப் பெயர், இடப் பெயர், காலப் பெயர், தொழிற் பெயர், சினைப் பெயர், உடைமைப் பெயர் என இவை.

இவற்றிற் கெல்லாம் உதாரணம் இதனீறு கூறு கின்ற மேலைச்சூத்திரத்துள் காட்டுதும். (கசு)

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வரூஉம்
காலக் கிளவி உயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே. (217)

என் - எனின், மேற்கூறிய வினை, வினைக்குறிப் பிற்கு ஈறுமாறு உணர்த்தல் நுதலிற்று.

இ - ள்:- பன்மையும் ஒருமையும் ஆகிய பால்களை அறிய வந்த அத்தன்மைத்தான மரபினையுடைய காலங் குறித்துக் கோடலொடு வரும் வினைச்சொற்கள் உயர்திணையிடத்து மேற்கூறிய தெரிநிலைவினையீறு களோடு ஈறு வேறுபாடில என்றவாறு.

என்றது, இவற்றிற்கென ஈறு வேறில்லை மேற் கூறிய இருபத்துமூன்று ஈறுமே இவற்றிற்கும் ஈறுவது என்றவாறு. இருபத்துமூன்று ஈறுதல் சென்றதேனும் இதுபொழுது காண்கின்றது உளப்பாட்டுத் தன்மையுள் அம் முதலிய நான்கும், அத்தன்மையுள் என் ஏன் என்னுமிரண்டும், படர்க்கையுள் அன் முதலிய ஒருமை நான்கும், அர் ஆர் என்னும் பன்மையிரண்டும். அல்லன வும் உளவேற்கொள்க.

உ - ம்:- உடையம், உடையாம், உடையெம், உடையேம், உடையென், உடையேன், உடையன், உடையான்,உடையள்,உடையாள்,உடையர்,உடையார் என அதுச்சொல்வேற்றுமையுடைமை வந்தவாறு.

இவற்றுள் ரகார முதலாகிய ஈறுகள் பெயர்நோக் கொழிய வினைநோக்குள்வழிக் கொள்க. இனி, பொரு ளுடையன், பொருளையுடையான், வில்லுடையன், வில்லை யுடையான் என்றாற்போல இருசொல்லாய் வாராது பொருளன்................வில்லன் என்றாற்போல, ஒரு சொல்லாய் வருதலும், அது பலபொருளன வல்வில்லன் என்றாற்போல்வன அடையடுத்து வருதலுங்கொள்க. நிலத்தம், நிலத்தாம், நிலத்தெம், நிலத்தேம், நிலத் தினென், நிலத்தினேன், நிலத்தன், நிலத்தான், நிலத் தள், நிலத்தாள், நிலத்தர், நிலத்தார்.........எனக் கண் ணென்னும் வேற்றுமை வந்தவாறு. இவற்றின் விகற்ப மும் அறிக.

பொன்னன்னம், பொன்னன்னாம், பொன்னன் னெம், பொன்னன்னேம், பொன்னன்னென், பொன் னன்னேன், பொன்னன்னன், பொன்னன்னான், பொன்னன்னள், பொன்னன்னாள், பொன்னன்னர், பொன்னன்னார் என இவை ஒப்புவந்தவாறு. இவற்றின் விகற்பமும் அறிக.

கரியம், கரியாம், கரியெம், கரியேம், கரியென், கரியேன், கரியன், கரியான், கரியள், கரியாள், கரியர்



கரியார் என இவை பண்பு வந்தவாறு. இவை ஒழியச் செம்மை முதலிய பண்பு ஆறும் இவ்வாறு ஒட்டுக. இவற்றின் விகற்பமும் அறிக.

அல்லம், அல்லாம், அல்லெம், அல்லேம், அல்லென், அல்லேன், அல்லன், அல்லான், அல்லள், அல்லாள், அல்லர், அல்லார் என இவை அன்மை வந்தவாறு. இன்மை முதலியனவும் இவ்வாறொட்டுக. இவற்றின் விகற்பமும் அறிக.

வன்மை என்பதனை இரட்டுற மொழிதலாகக் கொண்டு வன்மையும் வலிமையும் ஆக்கி வல்லம் வலியம் என இருவாற்றானுமொட்டுக. நல்லம், தீயம், சேயம், அணியம் எனப் பிற பண்போடும் எல்லாவீற்றையும் ஒட்டுக. இவற்றின் விகற்பமும் அறிக.

ஓராட்டையம், ஒரு திங்களம், ஒரு நாளம் என எல்லாக் காலத்தோடும் எல்லா ஈற்றோடும் ஒட்டுக. ஊனம், தீனம், செலவினம், வரவினம் என எல்லா வற்றோடும் எல்லா ஈற்றோடும் ஒட்டுக. முடவன், குருடன் செவிடன் என எல்லாச் சினையோடும் எல்லா வீற்றை யும் ஒட்டுக. இவற்றின் வாய்பாட்டு விகற்பமும் அறிக.

உடைமைப் பெயரும், பண்புப் பெயரும், காலப் பெயரும், தொழிற் பெயரும், சினைப் பெயரும் வந்தவாறு. (கஎ)

அஆ வஎன வருஉம் இறுதி
அப்பான் மூன்றே பலவற்றுப் படர்க்கை. (218)

என் - எனின், நிறுத்தமுறையானே உயர்திணை வினையும் வினைக்குறிப்பும் உணர்த்தி அஃறிணை வினை உணர்த்தல் நுதலிற்று.

அஃறிணை வினைதான் ஒருமை வினையும் பன்மை வினையும் என இருவகைத்து; அவற்றுள் பன்மைவினை

உணர்த்திய தொடங்கினர் என்பது. ஒருமையன்றே முன்னையதெனின் யாண்டும் ஒருமையை முன்கூறின் அதற்கோர் சிறப்புண்டுகொல் என்பதுபடும் என்று முந்துமொழிந்ததன் தலைதடுமாற்று என்பதோர் தந்திர வுத்தியும் உண்டாதலான் இவ்வாறு கூறினான் என்க.

இ-ள்:- அ, ஆ, வ என்று சொல்ல வருகின்ற ஈறுகளையுடைய அக்கூற்று மூன்று சொல்லும் பல வற்றை உணர்த்தும் படர்க்கைச்சொல்லாம் என்றவாறு.

உ-ம்:- உண்டன, உண்டில, உண்ணாநின்றன, உண்கின்றன, உண்ணாகின்றில, உண்கின்றில, உண் பன, உண்ணல என அகரம் வந்தவாறு. இவ்வகரம் வருங்கால் உடன்பாட்டின்கண் னகர ஒற்றோடு கூடி யும், மறைக்கண் லகரஒற்றோடு கூடியும் அல்லது வாராதுபோலும். உண்ட, தின்ற, வந்த, போய் என வருமால் எனின், அவை எல்லாக் காலங்களினும் வாராமையான் அந்நிகரனவற்றின் னகரம் செய்யுள் விகாரத்தால் குறைந்தது என்க. உண்ணா, தின்னா என ஆகாரம் வந்தவாறு. இதற்கு உடம்பாடு, எக் காலத்தும் இல்லையெனக் கொள்க.

இதற்கு எதிர்காலமே உள்ளது, இதற்கு மறை உண்ணல என அகரத்தின் மறை எனக் கொள்க. உண்டன அல்ல, உண்டன இல்லை எனப் பிறவாய்ப் பாட்டு மறையும் அறிக. (கஅ)

ஒன்றன் படர்க்கை தறட ஊர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும். (219)

என்-எனின், ஒருமைப் படர்க்கையாமாறு உணர்த் தல் நுதலிற்று.

இ-ள்:- ஒன்றனை உணர்த்தும் படர்க்கைச்சொல் தறடக்களை ஊர்ந்த குற்றிய லுகரமாகிய ஈற்றெழுத்தினை யுடைய சொற்களாம் என்றவாறு.



உ-ம்:- வந்தது, வந்திலது, வாராநின்றது, வரு கின்றது, வாராகின்றிலது, வருகின்றிலது, வருவது, வாராது எனத் தகரம் வந்தவாறு. கூறிற்று தாயிற்று என றகரம் இறந்தகாலம்பற்றி வந்தவாறு. இது உண்டல், தின்றல் என்னும் எல்லாத்தொழிலொடும் ஓடாமையும் அறிக. குண்டுகட்டு, கொடுந்தாட்டு என்பன டகரம். இது குறிப்பின்கண் வருவதெனக் கொள்க.

மற்று இது வினைக்குறிப்பு ஓதும்வழி ஓதாதது என்னை எனின், மேல் குறிப்பினைத் தெரிநிலை வினையி னோடு மாட்டெறியுமாகலான் இத்தெரிநிலையுள் அடங்கா டுகரமில்லது கண்டு ஆண்டு மாட்டேலாது என ஈண்டே கூறினாரெனவுணர்க. இவ்வாறு பன்மையும் ஒருமையும் அறிவிக்கும் ஈறுகள் கிளவியாக்கத்துள்ளே யோதினார் அன்றே எனின், ஆண்டு இடவரையறையின்மையின் ஈண்டு அவற்றிற்கு இடம் வரையறுத்தவாறாகக்கொள்க. இக்கடாவும் விடையும் உயர்திணைப்படர்க்கை வினைக்கும் ஒக்கும் எனக் கொள்க. அவற்றுள் பாலுணர்த்தும் என்ற னகரவீறு தனித்தன்மைக்கண் என்னென்புழி இருபாற்கும் பொதுவாய் நின்றதால் எனின், ஆண்டும் ஒருமையு மென்னுந் துணையும் உணர்த்தியது எனக் கொள்க. அக்குறைபாடுகளான் அன்றே அவ்வெழுத் துப் பதினொன்றற்கும் படர்க்கைவினையென இடம் வரையறுத்ததெனக் கொள்க. (ககூ)

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அம்மூ விரண்டும் அஃறிணை அவ்வே. (220)

என்-எனின், மேல் விரித்தனவற்றை எல்லாம் தொகுத்து, இன்னதிணைக்குரிய என்பது உணர்த்தல் நுதலிற்று.

இ-ள்:- பன்மையும் ஒருமையும் ஆகிய பால்களை யறியவந்த அவ்வாறும் அஃறிணையுடையன என்றவாறு.

ஆருவன, அகர ஆகார வகரங்களும், தகர றகர
டகரங்களை யூர்ந்த குற்றியலுகரம் மூன்றும் எனக்
கொள்க.

ஒன்றென முடித்தலென்பதனன் இவ்வீறு பெயர்க்
(உ0)
கும் ஈறுதல் கொள்க.

அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்
ஒக்கும் என்ப எவனென் வினவே. (221)

என் - எனின், அஃறிணைத் தெரிநிலை வினை
உணர்த்தி, அதன் வினைக்குறிப்புக் கூறுவான் இரு
பாற்கும் உரியதோர் குறிப்புணர்த்துகின்றாரென்பது.

இ - ள்:- மேற்சொல்லப்பட்ட அஃறிணையிடத்து
ஒருமைப் பன்மையாகிய இருபாற் பொருண்மைக்கு
மிகுதி குறைவின்றி யொக்கும் என்று சொல்லுவர்
ஆசிரியர்; எவனென்று சொல்லப்படும் வினப்பொருண்
மையையுடைய சொல்வில் எ - று.

உ - ம்:- எவன் அது, எவன் அவை. இதனை மேற்
கூறுகின்ற வினைக்குறிப்பொடு கூறாதது என்னை
யெனின், இஃது ஈறுதிரியாது இருபாற்கும் ஏற்பது
ஒன்றாகலின் வேறு கூறினார் என்பது.

தெரிநிலைவினை யீறுகளே குறிப்பிற்கும் ஈறாம்
என்று மாட்டேற்றுதற்கேலாதால் எனின், அவ்வாறு
ஏலாமையினன்றே இது வேறு கூறியது என்க.
இதனோடு அஃறிணை ஈறேழென்பது பெற்றாம். இவ்வாறு
இதனோடு அஃறிணைப்பான்மேல் கிற்றலான் "னஃகா
னகரம் அஃறிணைப்பான்மேல் கிற்றலான்" என்றவழிப் படர்க்கை
னெற்றே ஆடூஉ வறிசொல்" என்றவழிப் படர்க்கை
யிடத்து முற்றுச்சொற்கு ஈறாயவழித் திரிபின்றி
யுணர்த்தும் என்ற ரகாரம் யாரென்னும் வினவின்கண்
ஒருமைக்கும் உரித்தாய் நின்றதன்றோ எனின்
(உக)
அவையாகின்றவாறறிந்தது.



இன்றில உடைய என்னும் கிளவியும்
அன்றுடைத் தல்ல என்னும் கிளவியும்
பண்புகொள் கிளவியும் உளஎன் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியும்
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ
அப்பாற் பத்தும் குறிப்பொடு கொள்ளும். (222)

என் - எனின், அஃறிணை வினைக்குறிப்புணர்த்தல்
நுதலிற்று.

இ - ள்:- இன்று, இல, உடைய என்னும்
சொற்களும், அன்று உடைத்து அல்ல என்னும்
சொற்களும், நிறப்பண்புப் பெயரினைத் தனக்கடியாகக்
கொண்ட சொல்லும், உள என் சொல்லும், நிறப்பண்பும்
குணப்பண்பும் எனப்பட்ட இருவகைப் பண்பும் காரண
மாக உளதாகிய அப்பண்படைந்த சினையொடு முதலை
உணர்த்தும் சொல்லும், உவமப்பெயரைத் தனக்கு
அடியாகக்கொண்டுவரும் சொல்லொடு தொக்க அக்
கூற்றுப் பத்துச் சொல்லும் காலங் குறித்துக்
கோடலொடு வரும் வினைச்சொல்லாகக் கொள்ளப்படும்
என்றவாறு.

உ - ம்:- இவ்வெருது கோடின்று, இவ்வெருது
கோடில. கோட்டினது இன்மை முதற்கேற்றிக் கூறும்
வழி இவ்வாறாம்.

இனி அக்கோடு தனக்கேயின்மை கூறும் இவ்வெரு
திற்குக் கோடின்று என ஒரு பொருள் கூறியானும்,
இவ்விடத்துக் கோடின்று என ஓரிடம் கூறியானும்,
இக்காலத்துக் கோடின்று என ஒரு கால இடம் கூறியா
னும் வரும். இவ்வெருதுகோடுடைத்து இவ்வெருதுகள்
கோடுடைய எனப் பண்புணர்த்திவரும். உழுந்தல்ல
பயறு பண்புகொள் கிளவி...............இது பொதுவாக
ஓதினாராதலின் எல்லா நிறப்பண்பினோடும் ஒருமை
பன்மைப்பட வொட்டிக்கொள்க. உள என்பது, உழுந்
துள வெனக் குறிப்புணத்தியும் வரும். பண்பினாகிய
சினைமுதற்கிளவி குறுந்தாட்டு. ... ... ... ... ...

வெண்கோட்டது, வெண்கோட்டன என இருவகைப் பண்பும் பற்றிவரும். ஒப்பொடுவரூஉங் கிளவி பொன்னன்னது எனவரும். *(உடைமைப் பொருட்பெயர் முதலாய் அறுவகைப் பெயரினும் உடைமைப் பொருட் .... ... ... ... .... ... ... என்ற வாய் பெயர் ... .... ... ... .... ... ... என்ற வாய் பாட்டால் கொள்ளப்பட்டது.) அவ்வுடைமைதான் தற்கிழமையும் பிறிதின்கிழமையும் என்னும் இருவகையினும் வரும். இப்பொழுது மணியுடைத்து எனப் பிறிதின்கிழமை வந்தவாறு. இனி உண்டு உள என்றும், இன்று இல என்றும் பொருள் தனது உண்மையும் இன்மையும் கூறும்வழியின்றி அப்பொருளினைப் பிறிதொரு பொருட்கண் உண்மையும் இன்மையுங் கூறும் வழியதுடைமையாய்விடுமாகலால் இவற்றானும் உடைமைப் பொருள்பற்றிவருதல் கூறப்பட்டதாம். பண்புப் பொருள் நிறப்பண்பு பற்றி வருதல் 'பண்புகொள் கிளவியும்' என்றதனால் பெறப்பட்டது. இனிக் குணப்பண்புப் பெயர் அன்று அல்ல என்பவற்றானும், ஒரு பொருள் தனது உண்மையும் இன்மையும் உணர்த்திவரும் உண்டு உள இன்று இல என்பனவற்றானுங் கொள்ளப்பட்டது. உள என்று பன்மைவாய்பாட்டோதிய வதனால் அதன் ஒருமையாகிய உண்டு என்பதனையும் தன்வினைமுடித்தல் என்பதனால் கொள்க. நன்று, தீது, சேய்த்து, அணித்து என்னும் பிற பண்புகளை 'இன்றில' என வேறோதியவாற்றானே 'ஒன்றென முடித்தல்' என்பதனால்கொள்க. இவற்றுள் உண்டு உள என்பவற்றிற்கும் உடைத்து உடைய என்பவற்றிற்கும் இன்று இல என்பன வற்றை எதிர்மறையாகக் கொள்க. இவைதம்மைச் சேரவைத்தோதானையது செய்யுள் நோக்கிப்போலும். ஒப்புமைப்பண்புப்பெயர் 'ஒப்பினானும்' என்பதனால் கொள்ளப்பட்டது. சினைப்பெயர் 'பண்பினாகிய சினைமுதற் பெயரும்' என்பதனால் கொள்ளப்பட்டது.

* இட்பகுதி விளங்கவில்லை.



ஆயின் திருமூலதேவர் திருமந்திரத்திற் சித்தாந்தங் கூறியவாறென்னையோ எனின் அதுவும் வேதாந்த சித்தாந்த சாமரசியம் கூறவேண்டிச் சுத்த சைவ........ சித்தாந்தமறிந்து சொன்னாரென்க. அன்றிக் காமிகாதிகளும் நந்திபாற் பெற்றுக்கூறினாராக வீண்டுக்கூறியது சுத்த சைவ வரலாறு மாத்திரம் என்க. ஈண்டுக்கூறிய ஒன்பதனுள் யாமளம் ஒன்றென்றமையால்,

नवशक्तिविधिप्रोक्तं नवमूलं तु यामलम् ।

என்பதனால் மூலாகமம் ஒன்பது மாகலின் மற்றெட்டும் வேண்டாவாம். வாமம் என்னும் சாம்பவசைவ ந......வ பேதமூலாகமத்தின் வேறாயிற் றென்க.... ... ... ... ய முதனூல் கூறாததாம். இனி,

कुळार्णवं कुळोत्तीर्णं कुळसम्भवं कुळामृतम् ।
परानुत्तरागमार्थं च कौळिका कुळशासनम् ॥
सिद्धा मृताम्नाय सिद्धिरित्यादि शाक्तवामजम् ।
नव यामलयोर्भेदं तत्तद्भेदमनेकधा ॥
शाक्तेयं शाम्भवं शैवं शिवसम्बन्धकारणम् ।
त्रैसिद्धान्तमिति प्रोक्तमिदं शास्त्रं त्रिमेलनम् ॥
शुद्धशैवमिति ख्यातं शुद्धशाम्भवसम्भवम् ।

என்பதனால் மிச்சிரம்தோன்றயாமளம் கூறியதெனின், யாமளமும் சித்தாந்தமுமன்றி வாமம் என்னும் சாம்பவ மூலதந்திரநாமமின்மையின் மிச்சிரம் கூடாதாம். இவ்வாறு வருதலின் என்க. எனவே வாமசைவம் திருமந்திரமென்றுதவிராமற், சித்தாந்த நூலுமாம் என்று தோன்றி யுட்கொளற் குரைத்ததாகலிற் "பெற்ற நல்லாகமம்" என்பது திருமந்திர மன்றென்று கலிற் பிறர் கூறிய திருமந்திரம் போலியாம், இவ்வாறு நவபேதமான மூலதந்திர நெறி(யே)

मूलागमं तु सन्मार्गं सहमार्गं शिवागमम् ।

என வருதலின். ஆயின் இந்தச் சன்மார்க்கத்தினின் இப்பொழுது கண்ட ஞானசித்தி யாதோவெனின் மூலமான நவாகமத்திற்கும் உபபேதமான இருநூற்று இருபத்தெட்டில் எண்ணப்படும், ஞானஸாரம், தத்துவ ஸாரம், நிர்வாணஸாரம், சந்திரதீபம், தத்துவதீபம், யோகசித்தி தத்துவசித்தி முதலானவற்றுள் ஞான சித்தியாகமமும் ஒன்றென்க. இனி "இதுவே பின்னு, மொழிவதைந்து வத்திரத்தாற் காமிகாதி யொக்கவரு நாலேழுஞ் சகமார்க்கந்தா னுரைக்கி விவற்றுப பேத மிருநூற்றேழாம்'' என்புழி இந்த மூலாகமத்தையே அஞதமு... ... ... ...சொன்னமையிற் காமிகாதியு மூல தந்திரோற்பவமென்பது.

चतुर्विंशच्छतद्वयमष्टाविंशोपभेदकम् ।
.........भेद संक......मष्टविद्येश्वरोदितम् ॥
एतेषां विंशतिर्भेदाः सारतन्त्रावतारकम् ।
सन्मार्गं सहमार्गं च मूलदिव्यागमोदितम् ॥

என்பதனானும்,

मूलाद्या विंशतिः शास्त्राज्जातं सर्वत्र कारणम् ।
सद्यं वाममघोरं च पुरुषेशानपञ्चमम् ॥
तत्तत्प्रोक्तमतं शास्त्रं कामिकाद्यष्टविंशतिः ।

என்பதனானும் உணர்க. மற்றது,

कालोत्तरादि यद्भिन्नं तन्मूलस्योपभेदकम् ।
कामिकादि विभेदार्थं शतद्वयं तथाधिकम् ॥
वेदसारागमं शास्त्रं वेदान्तं चागमान्तकम् ।

என்றற் றொடக்கத்தான் உணர்க.

* * *







'இந்தனையும்' என்பது சுத்தசைவமும் அதற்குப் புறச்சமயம் அகச்சமயம் ஆமாறும் கூறுகின்றது. அது வருமாறு; முற்கூறிய ஞானசித்தியில்,

अनन्तागमयोर्मध्ये सारात्साराष्टविंशतिः ।
तन्मूलागम तद्भेदा नवधा मूलकल्पना ॥
तत्तत्सारांशसारार्थं तन्त्रावतरशास्त्रकम् ।
वेदागमरहस्यार्थं वेदागमान्तविस्मयम् ॥
शुद्धशैवप्रकाशार्थं शुद्धशाम्भवसम्भवम् ।
शुद्धशैवस्तथा सार सारात्सारप्रकाशितम् ॥
सारात्सारतरं गुह्यं गुह्याद्गुह्यं प्रकाशितम् ।
शाक्तस्य शाम्भवं शैवं शैवं शाम्भवशाक्तकम् ॥
वेदान्तसिद्धान्तविज्ञानगम्यं
वेदान्तसिद्धान्तकमेव तत्त्वम् ।
वेदान्त सिद्धान्त(वि)भेदभिन्नं
वेदान्तसिद्धान्तविश्रान्तिकं च ॥
शुद्धशैवः स्वसिद्धान्तमिदं शास्त्रप्रवर्तकम् ।

எனவும், பிறவும் வந்தவாறே; திருமந்திரத்திலும்,

ஆகமம் ஒன்பா னதிலான நாலேழும்
மோகமி லேழு பேதமு முற்றுடன்
பேதமில் வேதாந்த சித்தாந்த மெய்மையொன்
றாக முடித்த தருஞ்சுத்த சைவமே.

எனவும், பிறவும் வருமாற்றான் சுத்தசைவத்தினியல்பு கண்டுகொள்க. இதற்கு அகச்சமய புறச்சமயத்திற்கு வருமாறு. திருமந்திரத்தில்;

எட்டான வுட்சம யம்மிவை மாமாயை
எட்டாம் புறச்சம யத்துடன் யாவையும்
தொட்டான மாயை யிருமாயை தோயாது
விட்டார் சிவமாவர் வேதாந்த போதரே.

என வருதலின். ஆயின் இந்தச் சன்மார்க்கத்தினின் இப்பொழுது கண்ட ஞானசித்தி யாதோவெனின் மூலமான நவாகமத்திற்கும் உபபேதமான இருநூற்று இருபத்தெட்டில் எண்ணப்படும், ஞானஸாரம், தத்துவ ஸாரம், நிர்வாணஸாரம், சந்திரதீபம், தத்துவதீபம், யோகசித்தி தத்துவசித்தி முதலானவற்றுள் ஞான சித்தியாகமமும் ஒன்றென்க. இனி "இதுவே பின்னு மொழிவதைந்து வத்திரத்தாற் காமிகாதி யொக்கவரு நாலேழுஞ் சகமார்க்கந்தா னுரைக்கி விவற்றுப பேத மிருநூற்றேழாம்'' என்புழி இந்த மூலாகமத்தையே அஞதமு... ... ... ...சொன்னமையிற் காமிகாதியு மூல தந்திரோற்பவமென்பது.

चतुर्विंशच्छतद्वयमष्टाविंशोपभेदकम् ।
.........मेद संक......मष्टविद्येश्वरोदितम् ॥
एतेषां विंशतिर्भेदाः सारतन्त्रावतारकम् ।
सन्मार्गं सहमार्गं च मूलंदिव्यागमोदितम् ॥

என்பதனானும்,

मूलाद्या विंशतिः शास्त्राज्जातं सर्वत्र कारणम् ।
सद्यं वाममघोरं च पुरुषेशानपञ्चमम् ॥
तत्तत्प्रोक्तमतं शास्त्रं कामिकाद्यष्टविंशतिः ।

என்பதனானும் உணர்க. மற்றது,

कालोत्तरादि यद्भिन्नं तन्मूलस्योपभेदकम् ।
कामिकादि विभेदार्थं शतद्वयं तथाधिकम् ॥
वेदसारागमं शास्त्रं वेदान्तं चागमान्तकम् ।

என்றற் றொடக்கத்தான் உணர்க.

* * *







'இத்தனையும்' என்பது சுத்தசைவமும் அதற்குப் புறச்சமயம் அகச்சமயம் ஆமாறும் கூறுகின்றது. அது வருமாறு; முற்கூறிய ஞானசித்தியில்,

अनन्तागमयोर्मध्ये सारात्साराष्टविंशतिः ।
तन्मूलागम तद्भेदा नवधा मूलकल्पना ॥
तत्तत्सारांशसारार्थं तन्त्रावतरशास्त्रकम् ।
वेदागमरहस्यार्थं वेदागमान्तविस्मयम् ॥
शुद्धशैवप्रकाशार्थं शुद्धशाम्भवसम्भवम् ।
शुद्धशैवस्तथा सार सारात्सारप्रकाशितम् ॥
सारात्सारतरं गुह्यं गुह्याद्गुह्यं प्रकाशितम् ।
शाक्तस्य शाम्भवं शैवं शैवं शाम्भवशाक्तकम् ॥
वेदान्तसिद्धान्तविज्ञानगम्यं
वेदान्तसिद्धान्तकमेव तत्त्वम् ।
वेदान्त सिद्धान्त(वि)भेदभिन्नं
वेदान्तसिद्धान्तविश्रान्तिकं च ॥
शुद्धशैवः स्वसिद्धान्तमिदं शास्त्रप्रवर्तकम् ।

எனவும், பிறவும் வந்தவாறே; திருமந்திரத்திலும்,

ஆகமம் ஒன்பா னதிலான நாலேழும்
மோகமி லேழு பேதமு முற்றுடன்
பேதமில் வேதாந்த சித்தாந்த மெய்மையொன்
றாக முடித்த தருஞ்சுத்த சைவமே.

எனவும், பிறவும் வருமாற்றான் சுத்தசைவத்தினியல்பு கண்டுகொள்க. இதற்கு அகச்சமய புறச்சமயத்திற்கு வருமாறு. திருமந்திரத்தில்;

எட்டான வுட்சம யம்மிவை மாமாயை
எட்டாம் புறச்சம யத்துடன் யாவையும்
தொட்டான மாயை யிருமாயை தோயாது
விட்டார் சிவமாவர் வேதாந்த போதரே.

என்பதும், ஞானசித்தியிலும்,

न्यायं वैशेषिकं चैव बौद्धं चैवार्हतं तथा ।
लोकायतं च सांख्यं च मीमांसा वैष्णवं तथा ॥
एवमष्टौ बहिर्भेदाः बाह्याभ्यन्तर षोडश ।
शैवं शिवाद्वितं द्वेधा शिवमेलनं त्रयम् ॥
चतुर्थं पाशुपत्यं च पञ्चमं तु महाव्रतम् ।
षष्ठं कालामुखं चैव सप्तमं भैरवं तथा ॥
अष्टमं वामभेदोऽथ समयेत्यष्टमं भवेत् ।

என வருமாற்றானுணர்க. ஈண்டு உதாகரித்ததை முன் பின்னும் பின் முன்னுமாக ... நடங்கும் என்பதற்கு வருமாறு. அதிலேயே,

एवमष्टौ बहिर्भेदा बाह्याभ्यन्तर षोडश ।

என்றபின்,

भेदाभेदोभयज्ञानं मायावादप्रधानकम् ।
मन्त्र यन्त्रं च चक्रं च कालः प्रारब्धकर्म (च) ॥
... ... ... न्येष यवादिन ... ।
अष्टवादमिदं प्रोक्तं त्रियष्टश्चतुर्विंशतिः ॥
तीर्थशास्त्रप्रमाणं च अर्चनाध्यात्मपञ्चमाः ।
बाह्याभ्यन्तरयोर्भेदाः संकल्पाः षट्प्रभेदकाः ॥
... भेदाः षोडश समयास्तथा ।
ब्रह्मविद्यादि वादी च तत्त्ववादस्तु शून्यकः ॥
एवं पञ्चशिवोत्पन्नं श्रुत्वाऽऽगमान्यन्त्रजम् ।
अष्टा विंशत्प्रभेदार्थं मायाकुण्डलिनोद्भवम् ॥
वेदान्तं तत्त्वविज्ञानं तत्सिद्धान्तस्य साधनम् ।
वेदान्तार्थमयं ज्ञानं तज्ज्ञानं परमं पदम् ॥

என்றற்றொடக்கத்தாற் கண்டுகொள்க. இத்தந்திர பேத சைவம் பதினான்கும் மேல் விளங்கும்.



திப்புரைகள்:

## SERVICE.

சேவை என்ற பெயர் அமையப்பெற்ற இவ்வாங்கிலப் த்திரிகை விஞ்ஞானப்பரப்புதலுக்கு அரியசேவை செய்ய ன்வந்திருக்கிறது. இதன் முதல் வெளியீடு தீபாவளித் ங்களன்று தோன்றியிருக்கிறது. பத்திரிகைக்கு ஆசிரியர் ரீமான் கே. எஸ். வேங்கடராமன். மாபெரும் விஞ்ஞான ராய்ச்சிக்காரர்கள் பலர் விஷயதானம் செய்துள்ளார்கள். லை, கோவில், சுகாதாரம், ரஸாயன சாஸ்திரம், தொழிற் லை மூலம் பற்பலஉற்பத்திகளின் அபிவிருத்தி, சரித்திரம், பாருளாதாரம், அரசியல், அயல்நாட்டுத் தத்துவங்கள், லாசாரம், தேகப்பயிற்சி முதலிய பல அரியவிஷயங்களைக் றித்துக் கட்டுரைகள் உள்ளன. இப்பத்திரிகை மூன்று தங்களுக்கு ஒருமுறை வெளிவரும். அடுத்த நம்பர் னவரி 1952ல் 'ரிபப்ளிக்நம்பர்' என்ற பெயருடையதாக வளிவரும். ஸ்ரீ அரவிந்தர், ரமணர் இவர்களின் அழகிய டங்களும் மற்றும் பல படங்களும் சேர்த்து உயர்ந்த ளேஸ் காகிதத்தில் அச்சடிக்கப்பெற்றிருக்கிறது. இதன் லை ரூ. 3—0—0.

பிரசுரம்: கே. எஸ். வேங்கடராமன்,
ஆசிரியர், 9 லிங்கசெட்டித்தெரு, மதராஸ் 1.

### ஆண்டு அறிக்கை (1950—51).

தில்லித் தமிழ்ச்சங்க 5-வது ஆண்டு அறிக்கை கிடைக் பெற்றோம். 1—1—1946ல் நிறுவப்பெற்றது இச் கம். 5-வது ஆண்டு நிகழ்ச்சிகள் யாவும் குறிக்கப்பெற் ள்ளன. ஸ்ரீ ஸத்தியமூர்த்திநினைவாகப்புத்தகாலயம், வாசக லை ஆகியன இக்கழகச் சார்பில் நிறுவப்பெற்றுள்ளன. ச்சங்கப்பணி போற்றுதற்குரியது.

### தஞ்சை மணி.

இது வாரந்தோறும் குடந்தையிலிருந்து வெளிவரும் மிழ் வெளியீடு. முதல் இதழ் 15—11—51ல் வெளிவந் ருக்கிறது. முதற்பக்கத்தில் சிந்தனைக்குரிய சிலமொழிகள் ப்பட்டுள்ளன. ஏனைய பக்கங்களில் காலநிலைக்கு ஏற்பத் ர்தல் விஷயங்கள் விபரம் தரப்பட்டுள்ளன. தனிப்பிரதி ணா 2, ஆண்டுச்சந்தா ரூ. 5. நெடும்பலம் பெருநிலக்கிழார் R. சாமியப்ப முதலியார், குடந்தை R. கந்தசாமிமூப்பனார் A.,B.L., தஞ்சை S. சுயம்பிரகாசம் B.A.,B.L., ஆகியோர் இதன் பெருமையாசிரியர்களாகத் திகழ்கிறார்கள்.

விலாசம்: திரு S. கணபதி, ஆசிரியர், 'தஞ்சைமணி',
காந்தி பூங்கா மேல்புறம், கும்பகோணம்.

# விளம்பரம்

மாயவரம் தாலூகா தருமபுரம் ஆதீன மடத்துக்கு

சொந்தமான நஞ்சை புஞ்சை வகையரு குத்தகை ஏ

...பரம். தஞ்சாவூர்ஜில்லா மாயவரம்தாலூகா தருமபுரம்ஆதீனமடத்துக்கு ...ந்தமான திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள 1. ஆழ்வார்குரிச்சி, 2. திரு...டைமருதூர், 3. கபாலிப்பாரை, 4. பிரம்மதேசம், 5. மன்னார்கோவி... 6. ஊர்க்காடு, 7. அயன் தருமபுரம் மடம், 8. இனும் தருமபுரம் மட... 9. வேப்பங்குளம், 10. அரசபத்து, 11. சிவசைலம், 12. அகரம், 13. வ...ரிச்சாங்குளம், 14. ஆயிரப்பேரி, 15. செங்குளம், 16. காசிமேஸ்வர... 17. பண்பொளிப்பட்டிணம், 18. நயினார் குளம், 19. நடுவக்குளம் 2... ஸ்ரீ வைகுண்டம், 21. திருப்புளியங்குடி, 22. சொக்கலிங்கபுரம், 2... முக்கூட... கிராமங்களிலுள்ள நஞ்சை புஞ்சை வகையறுவை வருகிற 1362... பசலி முதல் 5- பசலிகளுக்கு திருநெல்வேலி ஜங்ஷன் வீரராகவபுரத்தில் ... ஆதீனத்துக்குச் சொந்தமான சிந்துபூந்துறை மடத்தில் 1951ஆு டிசம்பர்... 22, 23, 24 தேதிகளில் மாலை 3-மணிக்கு ஏலத்தில் குத்தகைக்கு விடப்படு... ஏலம் கேட்கப் பிரியமுள்ளவர்கள் அன்று ஆஜராகி ஏல நிபந்தனைகளுக்... உட்பட்டு ஏலம் கேட்கலாம். மற்ற விபரங்கள் மாயவரம் தாலூகா தருமபு... ஆதீனம் கச்சேரியிலோ, ஷை சிந்துபூந்துறை மடத்திலுள்ள ஆதீனம் காரிய...தரிடமோ தெரிந்து கொள்ளலாம்.

| | |
|---|---|
| தருமபுரம் ஆதீனம்,<br>கச்சேரி,<br>30—11—1951. | ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் ஆக்ஞைப்ப...<br>K S Ramaiya, B. A., B. L.,<br>மானேஜர். |

## ஜன்மநக்ஷத்திரத் திருநாள்

தருமபுர ஆதீனம் ஸ்ரீ-ல ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் ம... ஜன்ம நக்ஷத்திரநாட்களில் திருப்பதிகம்பெற்ற சிவஸ்தலங்கள்... ஆதீனச்சார்பில் அபிஷேக ஆராதனைகள் செய்வித்து அவ்வத்தல... பதிகத்தையும் அச்சிட்டு வழங்கி வருதல்போல, இம்மாதத்தி... 25—11—51 அன்று திருநல்லூர் ஸ்ரீ கல்யாணசுந்தரேசுவ... ஆலயத்தில் அபிஷேக ஆராதனை செய்வித்துத் தலப்பதிக வெளியீ... வழங்கப்பெற்றது.

Printed & Published by K. Sundaresa Iyer, Agent, Dharmapuram Adhinam at Gnanasambandam Press, Dharmapuram, (Mayuram) 9—12—1951.

